டாக்டர். பி. ஆர். வானமாமலைப் பிள்ளை.

[1894-லிருந்து 42-வருடங்களாக நீர் மருத்துவத்தில் அநேக அறிவாளிகளால் பொன் பதக்கம் பெற்றவர்.]

நீராவிக் குளிப்புப் பழக்க வழக்கமாய்ச் செய்யும், மக்களிடம் தோல் அல்லது ரத்தநோய் ஒன்றும் உண்டாவதில்லை.

டி. அர்க்குவார்ட்,
பார்லிமென்ட் மெம்பர்.



நீராவி வெப்பக் குளிப்புப் பெட்டி
ஒரு பக்கம் விளக்குள்ளது.

## வெப்பக்காற்று குளிப்புப் பெட்டி
## இரண்டு பக்கம் உஷ்ணமுண்டாகும்
## விளக்கமைந்தப் பெட்டி



"வெப்பக் காற்றுக் குளிப்பு எல்லாத் தோல் அல்லது ரத்த வியாதிகளைக் குணப்படுத்துகிறது."

டாக்டர். ஏ. பி. ஸ்டாக்கம்,

எம். டி.,

கிளை ஆபீஸ்:

டாக்டர் பி. எம். சங்கரலிங்கம் பிள்ளை

மேலவூர்,

தூத்துக்குடி.



இம் மருத்துவம் உடலிலுள்ள கெட்ட நீர்களையும், விஷ அணுக்களையும், கிருமிகளையும், வெளிப் படுத்தி நல்ல ரத்த விருத்தியைக் கொடுக்கிறது.

# அட்டவணை

"இயற்கையின் சட்டங்களை மீறி நடப்பதனாலேயே, நமக்கு இயற்கை கொடுக்கும் தண்டனையே வியாதி."

—டாக்டர் வில்சன்.

# முன்னுரை

உலகத்தில் வாழும் மக்கள் அதிகமாய் விரும்புவது உடல் நலமே. மக்கள் வாழ்நாளில், ஒரு நாளாவது ஒருவர்கூட நோயில்லாமல் இருப்பது அரிது. நோய் உண்டாவதற்குக் காரணம், உடலில் அழுக்குச் சேருவதும் அல்லது அந்நிய பொருள் சேருவதுமே யாகும். அப்படி வரும் நோயை நீக்க மக்கள் வைத்தியரை நாடுகின்றார்கள். வைத்தியர்கள் பல வகை முறைகளைப் பின்பற்றுகிறார்கள். அம்முறைகளாவன:—

(1) ஆங்கில வைத்தியம் (2) ஹோமியோபாதி (3) ஆயுள் வேதம் (4) யூனனி (5) சித்த வைத்தியம் முதலியன. இவை ஒவ்வொன்றும் பல மாதிரியில் கையாளப் படுகின்றன.

இந்த முறை ஒவ்வொன்றாலும் நோயாளருக்கு ஐந்து துன்பங்கள் இருந்து வருகின்றன. அவை:—(1) வெறுப்பு. (அதனால், மருந்தை உட்கொள்ளும்போது கண்ணை மூடி முகத்தைச் சுளித்துத்தான் ஆகவேண்டும். ஏனென்றால், மருந்தெல்லாம் நாவுக்கு வெறுப்பைத் தரும்.)

(2) பணச் செலவு. (நாள்தோறும் மருந்துகளை ஒரு ரூபா முதல் ஐந்து ரூபா வரையில் கொடுத்து வாங்கி மாதக் கணக்காய்ச் சாப்பிடவேண்டும் அல்லவா? ஏழைகளுக்கு இது முடியாது.)

(3) பத்தியம். (முன்சொன்ன இரண்டுடன் மருந்து அருந்துவோர்க்கு எண்ணெய் சேர்க்கக் கூடாது கடுகு கூடாது; புளியைத் தள்ள வேண்டும்; சோற்றை அகற்ற வேண்டும்—எனும் நிர்ப்பந்தங்கள் அதிகம். இவற்றால்

"மருத்துவ சாத்திரத்திற்குத் தெரிந்த முறைகளில் 'வெப்பக் காற்றுக் குளிப்பு' ஒரு மேலான திட்டமான, குற்றமில்லாத குணம் பண்ணும் முறை."

—டாக்டர், ஏ. பி. ஸ்டாக்கம் எம். டி.

---

நோயாளியின் காலுயிர் குன்றிப்போக மீதியில் பாஷாண மருந்தால் கால் உயிர்போய் மிகுந்த அரை உயிரால் நோயுடன் சண்டை போடப் பலம் அற்றுப் போகிறது.)

(4) கால தாமதம்.—(மருந்தினால் நோய் குணமாக நீண்ட நாளாகின்றது.)

(5) மருந்தின் பயம்.—(நோயாளர் பலர்க்கும் இப்போதும் வைத்தியர் எவ்வளவு நிபுணராய் இருந்தாலும் அவர் கொடுத்ததை வாங்கி உடனே வாயில் போட அச்சந்தான் தோன்றும். அதனால் நோயாளி வைத்தியரைப் பார்த்து,— இம்மருந்து முழுவதையும் சாப்பிடவா? வாய் கட்டுமா? மயக்கம் வருமா? என்னும் சந்தேகக் கேள்விகள் பல கேட்பதுண்டு. 'பாஷாணச் சத்து அதிகம் கலப்பதால் இம்மருந்து நோயாளியைத் திடீரென்று கொன்று விடுமோ' என்னும் சந்தேகமும் பயமும் முதலில் வைத்தியருக்கும் ஏற்படுவதுண்டு; நோயின் குணம், நிலை, நோயாளியின் பலம், வயது, குணம் விருப்பம் முதலியன தெரிந்து மிக நுட்பமாய் மருந்தை அளந்து கொடுப்பது கடினமான காரியம் அல்லவா?)

இந்த ஐந்து குறைகளும் இல்லாதது 'நீர் மருத்துவம்' ஒன்றே. இது, உடலில் சேரும் அழுக்கை அல்லது அந்நிய பொருளை நீக்கும் வன்மை உடையது; இயற்கையை அநுசரித்துப் பெருங்குடல் கழுவுதல், வெப்பக் காற்றுக் குளித்தல், உடம்பு பிசைதல், குளிர்ந்த நீர்த்துணி பொதிதல், பனிக்கட்டி நீரைப் பொதிதல், வெப்பம் ஒத்தல், துளி நீர்க் குளித்தல்,

"வைத்தியர்களுக்கு வெப்பக் காற்றுக் குளிப்பின் பயன் முழுவதும் தெரியும்போது, அதை அதிகமாகவும், மருந்தைக் குறைவாகவும், கொடுத்து நோயாளர்க்கு மிகவும் நன்மை செய்வார்கள்."

டாக்டர், எல். எ. சாயர், எம். டி.

---

உணவு மாற்றம், பழந் தின்னல், தனிக் குளிப்பு முதலிய சந்தோஷமான முறைகளால் நோயை நீக்கி உடம்பைக் குணப்படுத்தும்; கெடுதலைத் தராது; யாரும் எளிதில் செலவு அதிகமில்லாமல் செய்யக் கூடியது; நோயாளிகள் தாமே வாய்விட்டு விரைவில் குணமாகிறதென்று சொல்லக் கூடிய முறையை உடையது. இம்முறைப்படி வைத்தியம் செய்யச் செய்ய நோயாளர்க்கு மனமகிழ்ச்சியும், அழகும் அதிகம் உண்டாகும்.

மருந்து கையாளும் முறையைத் தீரக் கற்று அநுபவம் நிறைந்த பல நிபுணர்கள், உலகப் பெரியார்கள் இந்த 'மருந்தில்லா வைத்திய முறையை'ப் புகழ்ந்திருக்கும் செய்தியை இப்புத்தகத்தில் வாசித்து அறியலாம்.

சென்னை ராஜதானியில் சர்க்கார் மருந்து கலாசாலையில் முதலில் எம். டி. பட்டம் வாங்கிப் பிறகு மருந்து முறையை வெறுத்து இந்த வைத்தியத்தின்மீது ஆசைகொண்டு, ஆதியில் இந்தியாவிலிருந்து முதன்முதலில் பிற நாடுகளுக்குப் போய் படிக்கப் போனவர் ராவ்பகதூர் டாக்டர் W. E. தனக்கோடி ராஜு எம். டி. சி. எம். யப். யம். யு. என்பவர். இவர், இங்கிலாந்தில் சென்று இருந்தபோது காலஞ்சென்ற நமது மகாராணி விக்டோரியா அம்மையாரின் அரண்மனையில் விருந்தினராய் இருந்து பெரும்புகழ் பெற்றார். பின்பு இந்தியாவுக்கு வந்து சென்னைச் சர்வகலாசாலையில் அங்கத்தினராய் இருந்து 1894-ஆம் ஆண்டு இந்த வைத்திய முறையைத் திருநெல்வேலி பாளையங்கோட்டையில் ஆரம்பித்தார்; பல நூல்களை எழுதி வெளியிட்டார்.

"வியாதிகளை நீக்குவதில் இந்த நீர் வைத்தியத்திற்கு இருக்கும் சக்தி அதிக மேலானது."

டாக்டர். சர். சான் பைவ், எம். டி., எப். ஆர். எச்,

---

வேறு வைத்திய முறையில் குணமாகாமற் கைவிடப் பட்ட பல நோய் பெற்ற மக்கள் இம்முறையால் குணமடைந் தார்கள். இதனால், இவர் பொது மக்களின் நம்பிக்கையையும் அரசாங்கத்தின் நன்மதிப்பையும் பெற்றார்.

இந்தியரும் ஐரோப்பியரும் அவரிடம் விருப்பங் கொண் டார்கள். அவர் மருந்தின் முறைபாடுகளை வெளியில் எடுத்துக் காட்டினர். நீர் மருத்துவத்தின் பெருமைகளைப் பற்றிப் புத்தகங்களை எழுதிப் பிரபலப் படுத்தினர்.

அங்ஙனம் பேரும், பெருமையும் பொருந்திய டாக்டர்-தனக்கோடி ராஜு அவர்களிடம், பாளையங்கோட்டையில் இவ்வைத்தியமுறை ஆரம்பிக்கப்பட்ட நாள்முதல் அவர்க ளுக்கு முக்கிய துணைவனா யிருந்து இந்த மேலான முறை யைத் தெரிந்து கொண்டேன். பலநாள் அநுபவப்பட்டு இந்நாள்வரையில் பலவிதமான நோய்களை நீக்கி உடம்பை உரம் பெறச் செய்து வருகிறேன்.

வேறு வைத்திய முறையால் நீங்காத குட்டம், நீரிழிவு, க்ஷயம், கண்டமாலை, பக்கவாதம், குன்ம வயிற்று நோய், பெண் ரோகம், பைத்தியம், மூல பவுத்திரம், தோல் சம்பந்த மான வியாதிகள், முதலிய சகல நோய்களையும் இந்த முறையி னால் குணமாக்கி யிருக்கிறேன். மருந்து முறையைக் கையா ளும் வைத்தியர்களே என்னிடம் வைத்தியம் செய்துகொண்டு புகழ்ந்து இருக்கிறார்கள்.

நோய் இல்லாதவர்களும் செய்தால், அவர்கட்கு உடல் வன்மையும், அழகும் அதிகம் உண்டாகும்.

"நீராவிக் குளிப்புப் பழக்கம், வழக்கமாய்ச் செய்யும் மக்களிடம் தோல் அல்லது இரத்த நோய் ஒன்றும் உண்டாவதில்லை."

டி. அர்க்குவார்ட், (பார்லிமேண்ட் மெம்பர்)

---

பாளையங்கோட்டையிலிருந்து, திருவனந்தபுரம், தூத்துக்குடி, மதுரை, தஞ்சை, திருச்சிராப்பள்ளி முதலிய இடங்களில் சென்று இம்முறையைப் பிரபலப்படுத்திவிட்டு, இப்போது இதை சென்னையில், கோமளீஸ்வரன் பேட்டை, புதுப்பேட்டை, ஹாரீஸ் ரோட்டில், 58 நெ. இல் அமைத்து வைத்தியஞ் செய்து வருகிறேன். இங்கே வந்த பிறகும் அரசர் முதல் ஆண்டி வரையில் இம்முறையை விரும்பி வைத்தியம் செய்யப்பெற்று முற்றிலும் குணமடைந்திருக்கிறார்கள். இதைக் கற்றுக்கொள்ள விரும்புவோரும், இதிற்குறித்த பெட்டியை வைத்து வீட்டிலேயே செய்துகொள்ள விரும்புவோரும் நேரில் பேசி விவரம் தெரிந்துகொள்ளலாம்.

இந்த வைத்திய முறை நாடெங்கும் பரவ வேண்டும் என்பதும், இதனால் நோயாளர் குணம் அடைய வேண்டும் என்பதுமே எனது விருப்பம்.

நம்முடைய உடலும் நீர் மயமாகவே இருக்கிறது. அதைத் தெரிவிக்கும் குறிப்பைக் காண்க:—

"உடம்பு முழுவதும் 70 பங்கு நீர் அடங்கியுள்ளது.
கண் விழியில் 98.7 பங்கு நீர் அடங்கி உள்ளது.
இருதயத்தில் 80 பங்கு நீர் அடங்கி உள்ளது.
எலும்பில் 25 முதல் 50 பங்கு வரையில் நீர் அடங்கி உள்ளது.
மூளையில் 40 பங்கு நீர் அடங்கி உள்ளது.
லங்ஸ் என்னும் சுவாசப்பையில் 79 பங்கு உள்ளது."

இவ்வாறு நீர் கொண்ட வடிவமாகவே நமது உடம்பு அமைந்து இருப்பதால், இவ்வுடம்புகட்கு வரும் நோயைப்

"மருந்தினால் குணமாகும் வியாதியாளர் சிலர். மருந்தில்லாமல் குணமாகிறவர் மிகப்பலர்.

டாக்டர். சர். ஜான் போப்ச். எம். டி. எப். ஆர். எச்.
(விக்டோரியா அரசியின் வைத்தியர்)

---

போக்குவதற்கு மருந்தில்லாத நீர் வைத்திய முறையே மிகவும் சிறந்ததாகும் என்பதை எல்லாரும் ஒப்புக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

(நீர்மை என்னும் சொல்லுக்கும் குணம் என்பதே பொருள்.)

சென்னை
கோமளீசுரன்
பேட்டை
15-1-1936

இங்ஙனம்
P. R. வானமாமலைப் பிள்ளை
டாக்டர்.

நீர் மருத்துவ முறை மிக மேலான குணமுள்ளதென்று புகழ்ந்துள்ள பெரியோர்கள்:—

1 டாக்டர் பிரீஸ் நிட்ஸ்—இவர் நீர் மருத்துவம் கண்டு பிடித்தவர்.
2 ,, ஹால். - இம்முறையை விருத்தி செய்தவர்.
3 ,, சர் - ஜான் போப்ஸ். எம். டி. எப். ஆர். சி. எச். விக்டோரியா அரசியின் வைத்தியர்.
4 ,, சர். எராஸ் மச் வில்சன். எம். டி. எப். ஆர். சி. எச்.
5 ,, எம். கல்வி. எல். ஆர். சி. எல். இ. எப். ஆர் சி. எச். இங்கிலாந்து சுகாதார அதிகாரி.
6 ,, சர். தாமஸ் வாட்சன். எம். டி. எல். எல். டி. சி. எல். முதலியன.
7 ,, சர் ஆண்ட்ரு கிளர்க். எம். டி; எம். ஆர். சி. எச்.
8 ,, சர். ஜான் பைவ். எம். டி; எப். ஆர். எச்.
9 ,, சர். சார்லஸ் ஸ்கூடமோர்

"இப்போதைய மருந்து முறை சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்க்கே அவமானமானது என்பதை மறுக்க முடியாது."

டாக்டர் ராமேச். எப். ஆர். சி. லண்டன்.

---

10 டாக்டர். எர்சா ஹாமில்டன் அரசகுடும்ப வைத்தியர்.
11 ,, சப்பர்ட் புருக்லீன்.
12 ,, டர்கம் டன்லப். எம். ஆர். ஐ. எ. இங்கிலாந்து சுகாதார நூலாசிரியர்.
13 ,, எல். எ. சோசர். எம். டி.
14 ,, கார்பென்டர். எம். டி. எப். ஆர். எச்.
15 ,, பாரஸ்ட்.
16 ,, ஸ்டாக்கம்.
17 ,, கிளின்டன்.
18 ,, லாரென்ஸ்.
19 ,, ட்ரால்.
20 ,, டர்னர்.
21 ,, ரோத்.
22 ,, வாட்சன்.
23 ,, பசன்.
24 ,, மாடன்
25 ,, ஆலன்சோ.
26 ,, மெட்காவ்.
27 ,, கிரகம்.
28 ,, வைட்மன்.
29 ,, வில்சன்.
30 ,, பிராங்.
31 ,, ரச்.
32 ,, பாக்கன்.

"கொடூரமான நரம்பு வியாதிகளும், வாதமும் நீர் வைத்தியத்தில் குணமாகின்றன."

டாக்டர். ஏர்சா ஏமில்டன். ஐரோப்பா அரச குடும்ப வைத்தியர்.

---

33 டாக்டர். பாகி.
34 ,, ஆச்லர்.
35 ,, பிரிரிட்டன்.
36 ,, பெயிலி.
37 ,, மில்டன்.
38 ,, கிரகரி.
39 ,, காக்ச்.
40 ,, அர்க்கர்ட்
41 ,, ஆர்வி கெல்லாக்.
42 ,, டேவிட் பால்சன்.
43 ,, இ, மேதர்சில்.
44 ,, பிரடரிக். ரீப்சு.
45 ,, டானியேல் ரக்சு.
46 ,, லூயிகூன்.
47 ,, சின்ட்லார்.
48 ,, பில்சு.
48 ,, செப்பர்ட்.
49 ,, புயிஸன்.
50 ,, ஒயிட்.
51 ,, க்யூல்டன்.
52 ,, லாக்கக்.
53 திரு போன் லீபிக்.
54 ,, கிரகரி.
55 ,, அலன் சோ.

"ரச மருந்து வியாதியாளனை சுடலைக்குத் தள்ளும்."

டாக்டர். எச். சி. காக்ஸ். எம். டி.

56 டாக்டர். பென்சமின் ரசு.
57 „ புளுடார்ச்.
58 „ வெயிர் மிச்சல்.
59 „ ஹறி ஸ்டாட்டில்.
60 „ லார்ட் லிட்டன்.
61 „ பாலகங்காதர திலகர்
62 „ மகாத்மா காந்தி முதலியவர்கள்.

என்னிடம் இந்த வைத்தியஞ் செய்து கொண்டு குணமடைந்த பிறகு, எனக்கு நற்சாக்ஷிப் பத்திரமும் பதக்கமும். கொடுத்த பெரியோர்கள்.

1 டாக்டர். சுந்தரம் எம். டி. திருநெல்வேலி D.M.O.
2 „ ராவ் பகதூர் சி. பி. ராமராவ் பி. ஏ. எம். டி, தஞ்சை ஜில்லா வைத்திய அதிகாரி.
3 „ சி அப்பாவு பிள்ளை. எல். எம். எஸ். திருநெல்வேலி.
4 „ கே. சுப்ரமணிய பிள்ளை. வண்ணாரபேட்டை அசிஸ்டெண்ட் சர்ஜன்.
5 „ டி. சி. பிள்ளை. எல். எம், பி . மைலாப்பூர்.
6 „ ஏ. லக்ஷ்மிபதி. பி. ஏ; எம். பி. சி. எம்; ஆயுள் வேத பாஸ்கரர், எழும்பூர்.
7 „ ஆர். அநந்த ராமய்யர், எல். எம். பி. மாயவரம்.
8 „ வி. சிவஞான யோகிகள் சென்னை மாகாண சித்த வைத்திய சங்கத் தலைவர்.
9 „ ராவ்சாகிப். எம். ஆபிரகாம் பண்டிதர். கருணாநிதி வைத்தியசாலை, தஞ்சை.

"நீராவிக் குளிப்பு எல்லா மருந்துகளேயும் விட அதிக
முக்கிய மானது" டாக்டர் மில்டன்

---

10 சர். M. வெங்கட சுப்பராவ். சென்னை ஹைகோர்ட்
ஜட்ஜ்; டிலிமிடேஷன் கமிட்டி மெம்பர்.

11 சர்.எம். டி. தேவதாஸ். சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ்

12 சர். சி. வி. குமாரசாமி சாஸ்திரியார். சென்னை
ஹைகோர்ட் ஜட்ஜ்.

13 திரு. பால் அப்பாசாமி, எம். ஏ. சென்னை ஸ்மால்
காஸ் கோர்ட் சீப் ஜட்ஜ்.

14 திரு. எஸ். சீநிவாச ஐயங்கார், (மாஜி) காங்கிரஸ்
தலைவர்.

15 எட்டய புரம் அரசர்.

16 ,, மந்திரி திரு. எஸ். டி. சண்முகம் பிள்ளை.

17 சர். வி. டி. கிருஷ்ணமாச்சாரியர். திவான், பரோடா.

18 சர். அல்பியம். எ. ஆர். பானர்ஜி. திவான் மைசூர்.

19 திவான் பகதூர். எஸ். குமாரசாமி ரெட்டியார்.
சென்னை அரசாங்க மந்திரி. மருந்து இலாக்கா.

20 சர். சிவஞானம் பிள்ளை. கே. டி. சென்னை அரசாங்க
மந்திரி.

21 திவான் பகதூர். திரு. டி. ரங்காச்சாரி, அட்வகேட்
சென்னை.

22 ராவ் பகதூர். திரு. எ. சுந்தர சாஸ்திரி. அட்வகேட்.

23 திரு. ஆராவமுது ஐயங்கார். ஷை

24 திரு. எஸ். நாராயணசாமி அய்யர். ஷை

25 திரு. எஸ். ராமகிருஷ்ண ஐயங்கார். ஷை

26 திரு. ராமா ராவ். ஷை

27 திரு. பரமேசுவரன் பிள்ளை. ஷை

"சுக சரீரிகளும் தங்கள் சௌகரியத்தைக் காப்பாற்ற, இதை செய்யும்படி நான் சந்தோஷமாய் சிபார்சு செய்கிறேன்',
டாக்டர், டி. எப். கிளின்டன்.

---

28 திவான் பகதூர். ஏ. எஸ். அப்பாசாமி பிள்ளை, மிட்டாதார்.

29 திரு. நல்ல பெருமான் பிள்ளை. மிட்டாதார், சேர்மன் தூத்துக்குடி.

30 ஆர். வைத்தியலிங்கம் பிள்ளை, போலீஸ் சூபரின் டெண்ட் திருவனந்தபுரம்.

31 ராவ் பகதூர். டி ஆழ்வார் செட்டியார். சென்னை.

32 திரு. பி திருவேங்கட முதலியார். துபாஷ், சென்னை.

33 திரு. பி. பப்பு பிள்ளை. சுபேதார் மேஜர், திருவநந்தபுரம்.

34 திரு. எம். வேணுகோபால் நாயுடு, ஜில்லா ரிஜிஸ்டிரார், மதுரை.

35 திரு. டி. சேஷய்யர். டிப்டிகலெக்டர், திருநெல்வேலி

36 திரு. காசிவிசுவலிங்கம் பிள்ளை. ஷை. மதுரை.

37 திரு. ராமசந்திர ஐயர். தாசில்தார், குற்ருலம்

38 திரு. எம் டி. முத்தையச் செட்டியார், சென்னை.

39 திரு. டி எ பிள்ளை, டாக்டர், மிலிடெரி சர்விஸ்.

40 திரு. எ. எஸ் அப்பாசாமி, கிறிஸ்தவ சங்கம். சென்னை,

41 திரு. கோபால கிருஷ்ண ஐயர், எக்சிகியூடிவ் இஞ்சினீயர், திருநேல்வேலி.

42 திரு. அநந்தராம ஐயர் ரெவினியூ கமிஷனர், திருவநந்தபுரம்.

43 திரு. துரைசாமி பிள்ளை, பி. ஏ. இன்கம்டாக்ஸ் இன்ஸ்பெக்டர்.

"இந்தக் குளிப்பால் வலியும் பிடிப்பும் மந்திரம் பண்ணி ஞற்போல் மறைகின்றன."

டாக்டர். பிரிடன்.

---

44 சர். கே. சீநிவாச ஐயங்கார், எக்சிகியூடிவ் கவுன்சில் மெம்பர்.

45 திரு. டி. புருஷோத்தம முதலியார், முனிசிபல் கமீஷனர், திருநெல்வேலி.

46 திரு. மராண்டா, சூபர்வைசர், திருவனந்தபுரம்.

47 சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் வெங்கடசுப்ப ராவ் அவர்கள் மனைவியார்.

48 திரு. ஜானகி, அம்மை அட்வகேட் சிங்கனமயங்கார் தாயார்.

## நற்சாக்ஷிப் பத்திரங்கள்

10 வருஷ காலத்திற்கு அதிகமாக P. R. வானமாமலைப் பிள்ளை அவர்களின் மாஸேஜ், ஜலவைத்திய முறைகள் முதலியனவற்றை நான் நன்ருய் அறிவேன். எனக்கு இடதுதோளில் அதிக நாளாய் நிரம்ப வலியும் உபத்திரவமும் மிகுந்ததற்காக ஒரு மாதகாலம் மாஸேஜ் முறையைக் கைக்கொண்டேன். அதில் நிரம்ப பிரயோஜனமும் சுகமும் உண்டாயின. ஆகையால் இந்த வைத்திய முறை நெடுநாளாயுள்ள வலிகளுக்கு மிக்க பிரயோஜனத்தைத் தரத்தக்கது என்று புலப்படுவதால், வானமாமலைப் பிள்ளை அவர்களிடம் நாட்பட்ட வலிக்கு வைத்தியம் செய்யலாம் என்று உறுதியாய்ச் சிபார்சு செய்கிறேன்.

தஞ்சை } ராவ் பகதூர். C. B. ராமராவ், B. A. M. D.
2—5—1920 } ஜில்லா டாக்டர்.

"வெப்பக் காற்றுக் குளிப்பு எல்லாத் தோல் அல்லது இரத்த வியாதிகளையும் குணமாக்குகிறது"

டாக்டர் எ. பி. ஸ்டாக்கம். எம். டி.

---

டாக்டர் தனக்கோடி ராஜுக்குப் பின் டாக்டர் வானமாமலைப்பிள்ளை அவர்கள் நீர் மருத்துவ சாலை ஒன்றைப் பாளையங்கோட்டையில், ஏற்படுத்தினார்கள். அது சில காலத்தில் நிரம்பவும் பிரயோஜனத்தையும் பிரபலத்தையும் அடைந்தது.

நான் அதிகமாய்ச் சிலகாலம் படித்த காரணமாகப் பசி முற்றிலும் இல்லாமல் வரவர மெலிந்து இறுதியாக 1889வரு என் உடல் வலிமை அறவே நீங்கிவிட்டது. அப்போது இருந்த ஜில்லா வைத்தியரைக் கலந்து பேசினேன். என் நண்பரான அவர் இடம் மாறிக் காற்றோட்டம் இருக்கும் இடத்தில் இருக்கும்படி யோசனை சொன்னார். நான் கடற்கரை, மலைச்சாரல் முதலிய பல இடங்கட்குப் போய்த் தங்கியதில் சற்றுக் குணமாயிற்று என்றாலும் முற்றும் குணம் ஏற்படவில்லை. பிறகு, வானமாமலைப் பிள்ளை அவர்கள் நீர் மருத்துவத்தைச் செய்துகொண்டேன். உடல் தேய்ப்பு, ஈரத்துணி பொதிவு, வெப்பக் காற்றுக் குளிப்பு ஆகியவற்றை ஒழுங்காய்ச் செய்தேன். எனக்கு மிகுந்த குணம் ஏற்படத் திருப்தியடைந்தேன்.

கனம் வானமாமலைப் பிள்ளை அவர்கள் அதிக அநுபவம் பெற்று, உடல் தேய்ப்பு முறையில் மிகத் தேர்ந்தவர்கள். தக்க ஆதரவு கிடைக்குமானால். இன்னும் அநேகருக்கு அவர்கள் உதவி புரிவார்கள்.

சென்னை
27-11-1923. } C. அப்பாவு பிள்ளை L. M. & S.

"மருந்து உற்பத்தியான காலத்திற்கு முன்னிருந்தே வியர்வை நீர் வெளிப்படச் செய்யும் முறையால் ஆரோக்கியம் பாதுகாக்கப்படுவதோடு, ஆரம்பம் அல்லது நாட்பட்ட வியாதிகளையும் குணம் பண்ணக்கூடும் என்று ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது."

டாக்டர். பார்டர் **M D.**

---

காலஞ் சென்ற டாக்டர் தனக்கோடி ராஜு **M. D.** அவர்கள் 1894-ல் நீர் மருத்துவ சாலையை இந்தியாவிலேயே முதல் முதலில் பாளையங்கோட்டையில் ஏற்படுத்தினர். அதனால், பெரும் பயன் ஏற்பட்டது. இந்த நீர் மருத்துவ சாலையில் தொடக்க முதல், கனம் டாக்டர் - வானமாமலைப் பிள்ளை அவர்கள் துணைவராய் இருந்து இம்மருத்துவக் கொள்கைகளையும் செய்யு மாதிரியையும் நன்ருய் அநுபவப் பட்டுக் கற்றுக் கொண்டார்கள். பிறகு, தாமே ஒரு மருத்துவ சாலையை ஏற்படுத்தினர். அதன் மூலமாகப் பலநோயாளர் பயன் அடைந்து சென்றார்கள்.

அவர்கள் முறையில் உடல் தேய்ப்பு, வெப்பக்காற்றுக் குளிப்பு, குளிர்ந்த நீர்க்குளிப்பு, ஈரம் துடைத்தல், ஈரத்துணி பொதிதல், பெருங்குடல் கழுவுதல் முதலியன அடங்கியுள்ளன. நோய்க்குத் தக்கபடி இவைகளைச் சேர்த்துப் பிரித்தும் இம்முறை செய்யப்படும்.

நிரம்பவும் பயன் தரும் முறைகள்:—

1 குடல் கழுவுதல்.
2 உடல் தேய்ப்பு
3 வெப்பக் காற்றுக் குளிப்பு
4 ஈரத் துணி பொதிவு

கனம். பிள்ளை அவர்களை 30 வருஷங்களுக்கு மேலாக எனக்கு நன்ருய்த் தெரியும். அவர்கள் முறையை மிக நுட்ப

மாகக் கவனித்து வந்திருக்கிறேன். நானே சில நாட்பட்ட நோயாளரை அனுப்பினேன். அவர்களைக் குணமாக்கி யிருக்கிருர்கள்.

குணப்படும் சில நோய்களாவன:—

1 நாட்பட்ட அஜீரணம்
2 கொப்பளம்
3 பிளவை
4 நீரழிவு
5 நாட்பட்ட இருமல்
6 தொண்டைப் புண்
7 சுவாச காசம்
8 நாட்பட்ட மூத்திர வியாதி
9 நரம்புத் தளர்ச்சி
10 நெடுநாள் தோல் வியாதி
11 வாதம்
12 இரத்தம் கெட்டிருத்தல்—முதலியன.

இந்த நோய்களால் வருந்திய பலர், இவர்கள் வைத்திய சாலையில், நற்பயனடைந்தது எனக்குத் தெரியும்.

1925-ல் எனக்கு நரம்புத் தளர்ச்சி ஏற்பட்டு, பசியற்று, நலமில்லாமல் இருந்தேன். அப்போது, இவர்கள் முறையை ஒழுங்காய்ச் செய்ததில் முழுக்குணமடைந்து, நான் என் வேலைக்குப் போக நேர்ந்தது.

நேரில் நானே செய்துகொண்டிருப்பதால் பலர்க்குச் சிபார்சு செய்ய அஞ்சாது முன் வருகிறேன். க்ஷய நோய், இருமல் முதலியன அறவே குணம் பண்ணக் கூடும். மோச

"சுகத்தைக் காக்கவும் அழகைக் கூட்டவும், இதைவிட அதிக பிரயோசனமான அல்லது குணம் பண்ணக்கூடிய தொரு சுகாதார முறை நான் சிபார்சு பண்ணுவதற்கு இல்லை."

டாக்டர். மேடன், லண்டன்.

---

மான நோய்கள் சிலவற்றைத் திருப்தியாய் இப்பிள்ளை அவர்கள் குணம் பண்ணி இருப்பதை நானறிவேன்.

நீர் மருத்துவம் சாஸ்திர சம்மதமானது; மருந்தும் கத்தியும் வேண்டப்படாதது. இதன் பெருமை சிறப்பானது. இது பிரபலமடைந்து பல ஜில்லாக்களில் பலர் விரும்பி வந்து மருத்துவம் செய்திருக்கிறார்கள்; பொற்பதக்கங்களும் நற்சாக்ஷி பத்திரங்களும் பல அளித்திருக்கிறார்கள்.

இப்போது இந்த மருத்துவ சாலையைச் சென்னையில் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இது, அங்குள்ளவர்க்கு மிகப் பயன் உள்ளதாய் இருக்கும் என்று நம்புகிறேன். இம் முறையை, ஆதரிக்கும்படி பொது மக்களுக்கு நான் முழு நம்பிக்கையுடன் சிபார்சு செய்கிறேன்.

1-10-27

K. சுப்பிரமணிய பிள்ளை,
ரிடையர்ட் அசிஸ்டெண்ட் சர்ஜன்.

எனக்கு, டாக்டர் வானமாமலைப் பிள்ளை அவர்களைக் கடந்த பலவருஷங்களாகத் தெரியும். அவர்கள் காலஞ்சென்ற டாக்டர். தனக்கோடி ராஜு M. D. அவர்களிடம் உடல் தேய்ப்பு, நீர் மருத்துவத்தைப்பற்றிப் படித்தவர்கள். அதனால், இம்முறைகளை அதிக திறனோடும், பெருமையோடும் நடத்தி வந்து, வாதம், அஜீரணம், மலச்சிக்கல், முதலிய நாட்பட்ட நோய்களைக் குணப்படுத்தி இருக்கிறார்கள். அவர்கள் நற் சாக்ஷிப் பத்திரங்களே அவ்வுண்மையை விளக்கும்.

"மருந்தில்லாமல் அதிக கொடூரமான இரத்த சம்பந்தமான நோய்களும் இதிற்குணமாகப் பார்த்திருக்கிறேன்"

—டாக்டர். இ. ஹாமில்டன்

---

நானே, முடக்குவாதமுள்ள ஒருவர்க்கு இம்மருத்துவத்தைச் செய்யச் சொல்லித் திருப்தியாக அவர் குணம் அடைந்ததை யறிந்திருக்கிறேன். அந்த நோயாளி அதற்கு முன் இந்திய மருந்து மருத்துவர் பலரிடமும், ஐரோப்பிய மருந்து மருத்துவரிடமும் வைத்தியம் பண்ணிப் பயன் பெறவில்லை என்பதும் எனக்குத் தெரியும்.

இந்த மருத்துவம் என் மனத்தில் நல்ல நம்பிக்கையை உண்டாக்கியது. அதனால், இதை நான் எழுதலானேன். இதை அறியாதவர்கள் நாட்பட்ட நோயாளராய் இருந்தாலும், இம்முறையைக் கையாடிச் சுகமடையலாம். பலஈனத்திற்கு நானே இம்மருத்துவம் செய்து சுகமடைந்தேன்.

டாக்டர். டி. சி. பிள்ளை, **L. M. P**

மயிலாப்பூர், 15-7-24. }

குட்வின் அண்ட் கோ.,
கச்சேரி தெரு, மைலாப்பூர்.

நான், நீர் மருத்துவ குளிப்பில் தேர்ந்த கனம், வான மாமலைப் பிள்ளை அவர்களின் நீர் மருத்துவத்தைப் பார்த்திருக்கிறேன். வாதம், கபம் சம்பந்தமான நோய்களைக் குணம் பண்ணுவதில் இம்முறை சிறந்தது.

நீர் மருத்துவப் பெட்டி ஒன்றை அவர்களிடம் இருந்து விலைக்கு வாங்கி யிருக்கிறேன். மருந்து சாப்பிடுவதையும், ஊசி குத்துவதையும் மிகவும் விளம்பரஞ் செய்யும் இக்காலத்தில் இந்த மருத்துவத்தை ஜனங்கள் கவனிக்காமல் இருப்பது ஆச்சரிய மில்லை.

"மருந்து வைத்தியத்தின் எந்த முறையையும் விட அதிக மாகக் குணம் பண்ணும் ஆற்றல் வெப்பக் காற்றுக் குளிப் புக்கு இருக்கிறது. இதன் மேன்மையை மற்ற மருந்து முறை யோடு ஒப்பிட முடியாது."

டாக்டர். டர்கம் டன்லப் **M. R. I. A.** இங்கிலாந்து தேசத்தின் பெரிய சுகாதார நிபுணர்.

---

ஆயுள் வேதத்தில் சிநேஷ, சுவேதத்தில் சேர்ந்த இந்த மருத்துவம் முன்னுக்குக் கொண்டு வரப்பட வேண்டும். இந்த நீர் மருத்துவம் நல்ல நிலைமையை அடைய விரும்புகிறேன்.

சென்னை 9—1—29 } டாக்டர் **A.** லக்ஷ்மிபதி **B. A. M. B. C. M**

டாக்டர் வானமாமலைப் பிள்ளையை எனக்குச் சில நாள் களாகத் தெரியும். என் நரம்பு வியாதிக்கும், என் மனைவி இருமலுக்கும், இந்த நீர் மருத்துவத்தைச் செய்து பார்த் தேன். எனக்கு 3 நாளிலும், என் மனைவிக்கு 5 நாளிலும், குணம் ஏற்பட்டு இம்மருத்துவம் திருப்திகரமாயும், கவனிக்கத் தக்க தாயும் இருந்தது. அவர் செய்யும் மாதிரியில், இம்முறை இயற்கை வைத்தியமாகும். ஆகையால், சில மாறுதல்களோடு ஒவ்வொரு நோய்க்கும், தக்கவாறு மருத்துவம் செய்கிறார் கள். நாட்பட்ட கொடிய நோயுள்ளவர்கள் இதைக் கையா டினால், பூராவும் பிரயோசன மடையலாம், என்று தெரிகிறது. உணவு கொள்ளல், ஓய்வு எடுத்தல் முதலிய சில (அவர் களுடைய) முறைகளைப் பணக்காரர்களே நன்றாய்ச் செய்து கொள்ள முடியும். அவரிடம் இருக்கும், பெரிய மனிதர் பலர் கொடுத்திருக்கும் நற்சாக்ஷிப் பத்திரங்களின் முன்பு என்னு டைய நற்சாக்ஷிப் பத்திரம் எம்மதிப்பை உடையதாகும்? என்னைவிட மேலானவர்கள் பலரிடம் அவர்கள் நற்சாக்ஷிப் பத்

"வெப்பக்காற்றுக் குளிப்பு செய்து கொண்டால் தோல் மிருதுவாகி நிறமடைந்து, கண் தெளிவடைந்து ஒளிமிகுந்து, உடல் முழுதும் வாச மேற்பட்டுத் தேகத்தின் பல பாகங்கள் அழகும் மிகுதிப் படுகிறது."

டாக்டர். பார்டர், எம், டி

---

திரங்கள் பெற்றிருக்கிறார்கள். பெரியோர்கள் அவருடைய அருமையான முறைகளை இன்னும் அதிகமாய்ச் செய்து கொள்ளுவார்கள் என்று நான் நம்புகிறேன்.

மாயவரம்
5—5—1934

R. அநந்த ராமய்யர் L. M P.
ரிஜிஸ்டர் மெடிகல் பிராக்டீசனர்

கனம் வானமாமலைப் பிள்ளை அவர்களிடம், நோயாளிகள் பலரை அனுப்பினேன். அவருடைய முறையினால் நோயாளிகள் எல்லாரும் பூராவும் குணப்பட்டுத் தேகாரோக்கியத்துடன் சுகமடைந்து வந்தார்கள். எந்த வைத்திய முறையினும் குணப்படுத்த முடியாத நீடித்த நோய்கள் இந்த நீர் வைத்திய முறையில் அதிக ஆச்சரியப்படத்தக்க விதமாகக் குணம் ஆகின்றன. இன்னின்ன நோய் குணமடைந்திருக்கிறதென்பதையும், இன்னின்னார் குணமடைந்தார்கள் என்பதையும் நான் எழுதி முடியாது. ஆகையால் சுருக்கமாக, எவ்வித நோயாளர்க்கும், இந்த முறை திடமாய் நன்மை தந்து நோயாளர் வைத்தியர் இருவருக்கும் திருப்தியளிக்கும் என்று நான் கூறுகின்றேன். குறிப்பிட்ட நோயாளர்களைத் தவிர சிலர்க்கு நோய் இன்னதென்று தெரியாமல் எப்போதும் சங்கடப்படுவார்களும் உண்டு. அப்படிப்பட்டவர்கள், தேகாரோக்கியமில்லாமலும், குறுகிய நெஞ்சு உடையவர்களாயும், கனத்த தேகமுடையவர்களாகவும், பெருத்த வயிறு உடையவர்களாகவும், நரம்பு பலஹீனமுடையவர்களாகவும், வறண்ட தோலை உடையவர்களாகவும், சோம்பேறிகளாகவும், பிறர்

"மருந்து வைத்தியர்கள் அதிக காலம் கழித்துத்தான் டைபாயிட் சுரத்தை மருந்தினால் குணம்பண்ண முடியாதென்று அறிந்தார்கள்."

டாக்டர். ஆஸ்லர்,

---

தூண்டுதல் இல்லாமல் வேலை செய்ய முடியாதவர்களாகவும் இருக்கலாம். அவர்கள் இந்த முறையால், நல்ல சுகத்தை அடையலாம். வருஷத்தில் இரண்டு வாரம் இந்த முறையைச் செய்தால் களைப்பு நீங்கி உற்சாகமடைவார்கள். தவிர, மூளை வேலை அதிகப்பட்டவர்கள், சதா யோசனையில் ஆழ்ந்து, தேகப் பயிற்சி இல்லாமல் இருப்பவர்கள், தமது கெட்டுப் போன ஜீரணக் கருவிகளைச் சரிப்படுத்த முடியாமல் இருக்கிறார்கள். இந்த முறை அசௌகரியம் ஒன்றுமில்லாமல் நித்திய வேலையைச் சரியாய்ச் செய்யுமளவு போதுமான பலத்தை அவர்களுக்குக் கொடுக்கும். இது தவிர, சாதாரணமாய்ப் பலஹீனமுள்ளவர்கள் இந்த முறையால், பலமும் நலமும் பெற்று மகிழ்ச்சி அடைவார்கள். மேற்சொன்ன நோய்கள் தவிர, நீடித்த வாதம், நீரழிவு, சுரங்கள், தோல் வியாதி, ஜீரணக்கருவி, சுவாசக்கருவி சம்பந்தமான வியாதி முதலியன இந்த நீர் மருத்துவ முறையில் குணப்படுத்தக் கூடும். ஜல வைத்திய முறையானது போதுமானதும் உறுதிப்பாடு உடையதுமான சாஸ்திர முறையுள்ள அஸ்திபாரத்தின்மேல்தான் உண்டாக்கப்பட்டிருப்பது. பூராவும் நன்கு பரிசோதிக்கப்பட்டு, கண்டுபிடிக்கப்பட்டிருப்பதால் பொது ஜன நம்பிக்கைக்காவது தொழில்முறை ஆதரிப்புக்காவது எந்த விதத்திலும் குறை கூறக் கூடியதில்லை என்பது உண்மை. வியாதிகளைச் சிகித்சை செய்யும் முறைகள் பலவற்றைப்பற்றி மருத்துவத்தில் பாண்டித்தியமுடையவர்கள் சாஸ்திர சம்பந்தமான இந்த முறைகளை மிகவும் பரிசீலனையுடன் ஒப்புக்கொண்

"வெப்பக் காற்றுக் குளிப்பு நான் வாரத்தில் இருமுறை ஒழுங்காய் எடுப்பதனுல்தான் என் ஆரோக்கியம் நன்ருயிருக்கிறது".

லாங்க்டிரி

டும் புகழ்ந்துகொண்டு மிருக்கிருர்கள். கீர்த்தி வகித்தவர்களில் 1 சர். சார்லஸ், ஸ்கூடமோர், 2 சர். ஜான், போர்வ்ஸ், 3 சர். தாமஸ் வாட்சன் 4 சர். எராஸ்மஸ் வில்சன், 5 சர். ஆண்ட்ரூஸ் கிளேர்க் முதலிய இவர்கள் விரிவான மனநிலைமையோடும், பாண்டித்தியத்தோடும் இந்த வைத்திய முறையைப் பற்றி ஒப்புயர்வில்லாத விதமாய் தங்கள் அபிப்பிராயங்களை உலகத்திற்குத் தெரிவித்திருக்கிருர்கள். அந்த வைத்திய சாஸ்திர நிபுணர்கள இந்த முறை எந்தெந்த வியாதிகளை விசேஷமாய்க் குணப்படுத்துமென்பதைப்பற்றிக் கீழ்வரும் வியாதிகளைச் சொல்லி இருக்கிருர்கள்.

1 மிகவும் நீடித்ததும் பல வியாதிக்குக் காரணமாகிய அன்ன துவேஷம்,

2 நாட்பட்ட தேக பலஹீனமும், மூளை சம்பந்தமான நரம்புத் தளர்ச்சியும்,

3 தடுக்க முடியாத கிராணிக் கழிச்சலும் வயிற்று அளைச்சலும்,

4 அநேக வாத ரோகங்களுய் நீடித்த அசுத்த இரத்த ரோகங்களும்,

தவிர, இதை நம்புகிறவர்களுக்கு இதன் முறை நல்ல வழி காட்டியும், அநுபவித்தவர்க்குச் சந்தோஷமாயும், மறுபடியும் இதைச் செய்யும்படி தூண்டுகிறதென்றும், எழுதும்படித் தோன்றும். ஓர் பெரிய பண்டிதரும் இந்த முறையைப் பற்றி வெகு தீவிர மாய்ப் பேசுகிறவருமானர் சொல்லுவதாவது:—

"உடல் தேய்ப்பினால் ஒரு வியாதியாளரின் உயிர் பிழைத்தது".

டாக்டர். யாகி.

---

மருந்துகளிலும், தாதுவர்க்கங்களிலும் உலகமெங்கும் சுற்றி ஆராய்ந்ததில் கண்ட உண்மையாது என்றால், அவைகளி லிருந்து நமக்குக் கிடைக்கக் கூடியது விஷம் தவிர வேறல்ல. நம்மைச் சுற்றிலும் இருக்கக் கூடியதும், நம்மிடத்து இருப் பதும், இயற்கை என்னும் தாயால் கொடுக்கப் பட்டதும், யாவரும் எளிதில் அடையக் கூடியதான ஜலமே நல்ல சரீர சுகம் கொடுக்கக் கூடியது. எங்கெங்கே நீரோடையில் சுத்த ஜல மிருக்கிறதோ எந்த இடத்தில் சுத்தநீர் ஊற்று இருக் கிறதோ அந்த இடங்களில் எண்ணிறந்த நோய்கள் இயற் கையின் உதவியால் குணமாக்கப் படுகின்றன.

C. அப்பாவு பிள்ளை L.M.S.
வீராகவபுரம். 29—7—10

## வெம்மைக் குளிப்பு

இந்த மருத்துவத்தை டாக்டர் தனக்கோடி ராசு அவர் கள் முதலில் திருநெல்வேலி ஜில்லாவுக்குக் கொணர்ந்து பரவ வைத்தனர். அவரிடத்தில் மாணவராயிருந்து கற்றுக் கொண்டவர் திருவாளர் வானமாமலைப் பிள்ளை.

இவர் இம்மருத்துவத்தைச் சீர்த் தேற்றமாய்ச் செய் வதில் மிகக் கைதேர்ந்தவர்.

இம் மருத்துவம் உடலிலுள்ள கெட்ட நீர்களையும் விஷ வாயுக்களையும், விஷ அணுக்களையும் கிருமிகளையும் வெளிப் படுத்தி நல்ல இரத்த விருத்தியைக் கொடுத்து, அதன் மூல மாகத் தேகத்திலுள்ள நோய்களைக் குணப்படுத்து கின்றது. உடலிலுள்ள பத்து, சிரங்கு, மேக நீர்த் தடிப்பு, குஷ்ட நீர்

"திட்டமாக, எந்த மருந்தும் கெடுதலானது"
டாக்டர். பேக்கன்.

---

களையும் மிக விரைவில் குணப்படுத்தும். மூல நோய், பீனிசம் பலஹீனத்தையும் போக்கும். இன்னும் பல நோய்களையும் நீக்கும்.

நானே வெம்மைக் குளிப்பு மூன்று மாதம் எடுத்துப் பார்த்தேன். என் காலில் இருந்த தூர்நீரைக் குணப்படுத்த அநுபவத்தில் கண்டிருக்கிறேன். யானே பலபேருக்கு இவ் வைத்தியம் செய்து, மேகநீரைக் குணப்படுத்தி, அநுபவப் பட்டிருக்கிறேன். ஆதலால், இவ்வைத்தியத்தை அனைவரும் நம்பிக்கையாய்ச் செய்ய தைரியமாய்ச் சிபார்சு செய்கிறேன்.

வி. சிவஞான யோகி,
ஆயுள்வேத பாஸ்கரர்,
மெம்பர், இந்தியன் மெடிசன் கமிட்டி.
மருந்து வைத்தியத்தில் பேர்போன நிபுணர்.

கோவிற்பட்டி
17-11-10

பலஹீனத்தால் தேகத்தில் ஆங்காங்கு வலி உண்டா யிற்று. அப்போது ஸ்ரீ, விருதை, சிவஞான யோகி ஸ்வாமிகள் மாஸேஜ் செய்துகொள்ளும்படி பாளையங்கோட்டை ஜல வைத் தியம், **P. R.** வானமாமலைப் பிள்ளை அவர்களை அனுப்பி னார்கள். அப்படியே அவர்களுடைய சிகித்சையில் $1\frac{1}{2}$ மாதம் இருந்தேன். அந்த முறை ஆரம்பித்ததும், எனக்கு ஏற்பட் டிருந்த வியாதிகளெல்லாம் குணமாய்விட்டன. அவர்க ளுடைய வைத்திய சிரமத்திற்காக ஒரு தங்கப் பதக்கம் அவர்களுக்கு ஞாபகார்த்தப் பரிசளிக்கிறேன். அவர்களுக்குச் சகல நன்மையும் உண்டாகும்படி நான் முழு மனத்துடன் விரும்புகிறேன்.

ராவ்சாகிப். மு. ஆபிரகாம் பண்டிதர்,
தஞ்சை.

"நாம் வியாதிகளைப் பெருக்கி இருக்கிறோம், இன்னும் அதிகம் செய்திருக்கிறோம்; வியாதியாளரின் மரணத்தை அதிகப்படுத்தி யிருக்கிறோம்."

டாக்டர். ரச்.

---

வானமாமலைப் பிள்ளையை 20 வருஷ காலத்திற்கு முன்னமேயே எனக்குத் தெரியும். அவர்கள், பாளையங் கோட்டையில் டாக்டர் தனக்கோடி ராஜா அவர்கள் ஜல வைத்திய சிப்பந்திகள் வைத்திருந்தபோது அவர்களுடன் இருந்து பழகியவர்கள். அவ் வைத்தியம் எல்லாராலும் விரும்பப்பட்டிருந்தது. அவர்களுக்குப் பின்னர், வானமாமலைப் பிள்ளை அவர்கள் மற்றச் சிப்பந்திகளை வைத்து நடத்திக் கொண்டு வந்தவர்கள். அவர்களுடைய வெம்மைக் குளிப்பு, திருநெல்வேலி, மதுரை ஜில்லாக்களில் உள்ள கனவான்களால் புகழப்பட்டது. 17 வருஷத்திற்கு முன்னதாக மாஸேஜ் என்னும் தேக தேய்ப்பு வைத்திய முறையால் விசேஷ நன்மை அடைந்திருக்கிறேன். ஆகஸ்டு மாதத்தில் எனக்கு ஏற்பட்ட 'இன்புளுயன்சா' என்னும் காய்ச்சலால் மிகவும் மெலிந்து போயிருந்தேன். அவர்கள் தேகத் தேய்ப்பு என்னும் மாஸேஜ் முறையை மூன்று வாரம் செய்தவுடன் தேகம் பழைய நிலைமையில் சுகத்தை அடைந்தது. மாஸேஜ் முறை சாஸ்திரப் பிரகாரம் தேகத்தின் ஒவ்வொரு அங்கத்திற்கும் உரியதாயிருக்கிறது. நான் முழு நம்பிக்கையோடு அவர்களைத் தகுதியுள்ள ஜல வைத்தியர் என்றும், உற்சாகப் படுத்தத் தகுதியுள்ளவர் என்றும் சிபார்சு செய்கிறேன். அவர்களுக்குச் சகல நன்மைகளும் உண்டாக கோருகிறேன்.

சர். M. D. தேவதாஸ் B. A. B. L.

சென்னை
22—1—19

பார் அட்லா
ஹைகோர்ட் ஜட்ஜ்

"சிறுவரும், வாலிபரும், வயோதிகரும், எவ் வயதினரும், எந்தக் காலத்திலும், சுகத்தை விருத்தி பண்ணவோ அல்லது வியாதியை நீக்கவோ நீராவிக் குளிப்பைச் செய்து கொள்ளலாம்."

டாக்டர், ரோத். M. D.

---

கனம் வானமாமலைப் பிள்ளை அவர்கள் மாஸேஜ் வைத்தியத்திலிருந்து, நான் (ஒரு கோர்ஸ்) 40 நாள் செய்து நிரம்ப பிரயோசனமடைந்தேன். அதில் அவர்கள் நிரம்ப தேர்ந்தவர்கள். வைத்தியம் படிப்பையும் அநுபோகத்தையும் பொறுத்தது. பலஹீனம் கண்டுகொள்பவர்கள் இவர்கள் வைத்தியத்தைச் செய்து சௌக்கியம் அடையலாம்.

சென்னை 6-4-24. } சர். சி. வி. குமாரசாமி சாஸ்திரி, ஹைகோர்ட் ஜட்ஜ்.

கனம் வானமாமலைப் பிள்ளை அவர்கள் மாஸேஜ் செய்வதில் தேர்ந்தவர்கள். நான் 40 நாளாகச் செய்துகொண்டேன். என் தேக சௌகரியம் அதிகரித்துக் களைப்பில்லாமல் நிறைய வேலை செய்ய முடிந்தது. மாஸேஜ் நிரம்ப சாமர்த்தியமாகவும், மெதுவாகவும் செய்கிறார்கள். நான் நன்கு சிபார்சு செய்கிறேன். அவர்கள் குணமும், நடத்தையும் மிகச் சிலாக்கியமானவை. நான் என்னுடைய நண்பர் பலரிடமும் இவ்வைத்தியம் செய்யும்படி சிபார்சு செய்து இருக்கிறேன்.

சர். M. வேங்கட சுப்ப ராவ்,
சென்னை 20-11-23 } ஹை கோர்ட் ஜட்ஜ், மெம்பர், டீ லிமிடேஷன் கமிட்டி.

வானமாமலைப் பிள்ளை அவர்களின் மேற்பார்வையில் நான் வெப்பக் காற்று குளிப்பு என்னும் வைத்தியம் செய்து கொண்டேன். அந்த வைத்திய முறைகளிலிருந்து விசேஷ குணம் இருந்தது. என்னுடைய முழங்காலில் வாத சம்பந்த

"வைத்திய சம்பந்தமான விஷயங்கள் 100-க்கு 99 பொய்யானவை. மருந்து சம்பந்தமான கொள்கைகளும் அநேகமாக மூடத்தனமானவை"

கிரகரி
ஸ்காட்லந்து.

---

மான ஒரு வலியைத் தவிர வேறு எவ்வித சுகவீனமும் இருந்ததில்லை. அவர்கள் செய்யும் தேகத் தேய்ப்பு, வெப்பக் குளிப்பு என்னும் வைத்திய முறைகள் தேகத்திலுள்ள ஒவ்வாத விஷ நீர்களை யெல்லாம் நீக்கிச் சுகப்படுத்திக் குணத்தைத் தந்தன. என்னுடைய தேகசுகம் வெகுவாய் விருத்தியடைந்தது. நான் முழு நம்பிக்கையோடு அவர்களை ஒரு அநுபோக ஜல வைத்தியர் என்று சிபார்சு செய்கிறேன்.

சென்னை 15-5-19 } பால் அப்பாசாமி, ஸ்மால்காஸ் கோர்ட் சீப் ஜட்ஜு.

ஜல வைத்தியர் வானமாமலைப் பிள்ளை எனக்கும் பல வருஷமாகத் தெரியும். அவர்களுடைய சிகிச்சை முறைப்படி நான் அநேக முறை வெம்மைக் குளிப்புக்கள் எடுத்திருக்கிறேன். அதின் பிரயோசனம் குளிக்கும்போது மன உற்சாகத்தையும், எடுத்த பிறகு தேக பலத்தையும் கொடுக்கிறது. வானமாமலைப் பிள்ளை செவ்வையாய் வைத்தியம் செய்து பிணிகளைப் போக்குவதில் புகழ் பெற்றவர். அவர்களிடம் சென்ற நோயாளிகளில் குணப் படாதவர் இலர். மென்மேலும் அவர்களுக்கு நன்மை உண்டாக.

திருநெல்வேலி 19—1—12 } எட்டப்பன் எட்டயபுரம் ராஜா.

வானமாமலைப் பிள்ளை அவர்களை சுமார் 18 வருஷகாலமாக எனக்கு நேரில் தெரியும். இந்திய தேசத்தின் இந்தப் பக்கத்தில் மேதாவியும் நன்கு அறியப்பட்டவருமான டாக்டர்

"சரியான நேரத்தில் வெப்பக் காற்றுக் குளிப்பைச் செய்தால் இருமல், வயிற்றளைச்சல், சீதபேதி ஆகியவைகளை வரவிடாமல் தடுக்கலாம், அல்லது குணம் பண்ணலாம்."

டாக்டர். C. D. மெட்காப், M. D.

நியு யார்க்.

---

தனக்கோடி ராஜு M. D. அவர்களின் முதலாவதான ஜல வைத்திய முறை ஏற்பட்ட முதற்கொண்டு எனக்கு வானமாமலைப் பிள்ளை அவர்களை ஜல வைத்தியராக இருந்து வருவதைத் தெரியும்.

இவர்கள் மேற்சொன்ன டாக்டரிடமிருந்து மிகவு கைதேர்ந்தவர். வியாதிகளைக் குணப்படுத்துவதில் யூகமும் வெற்றியும் கொண்டவர். என்னுடைய அநுபோகமும், எனக்குச் செய்த சிகிச்சையும், அதனாலான திருப்தியும் தவிர, பலருடைய நாட்பட்ட காய்ச்சல், அன்ன துவேஷம், வாத ரோகம், மண்டையிடி, இன்னும் இவை போன்ற பல வியாதிகளும் குணப்படுத்தப் பட்டது நிரம்பவும் புகழத் தக்கது. என்னுடைய அநுபோகத்திலும் ஆராய்ச்சியிலும் ஜல வைத்திய முறைகளினால் மனிதர்க்கு ஏற்படும் வியாதிகளைக் குணப்படுத்துவதில் இவர்கள் பூரண அறிவு உடையவர் இந்த முறைகளைக் கையாளுவதில் விசேஷ பழக்கமும், ஆற்றலும், முன்னறிவும் உடையவர்களாதலால் இவர்கள் வைத்தியம் செய்யும் வியாதிகள் குணப் படுத்தப் படுவதாலும், பொது ஜனங்களால் ஆதரிக்கப் படுவதாலும் அவர்களுடைய சிறிது கால முறையினால் கைதேர்ந்த வைத்தியர் எனப் பேர் பெற்றிருக்கிறார்கள். ஷை முறையான வைத்தியங்கள் தவிர, தேகத்தை முறைப்படத் தேய்த்தல் என்பதைக் கையாடுவதில் வாதநோய், பக்கவாதம், அன்னதுவேஷம், மலச்சிக்

"என் குடும்பத்தில் தீராத வாதத்திலும், தேக ஊதலிலும் வெப்பக் காற்றுக் குளிப்பை உபயோகித்திருக்கிறேன்."

டாக்டர். எ. பி. கிரகாம்.

---

கல், தேகசுகயீனம், வெளிப்படையான சர்ம வியாதிகள் முதலியவற்றையும் குணப்படுத்துகிறார்கள்.

எஸ். டி. ஷண்முகம்

எட்டயபுரம் திவான்,

ரிடையர்ட் டிப்டி கலெக்டர்.

எட்டயபுரம்
7-3-1917

நான் நீடித்த தொண்டைப் புகைச்சலால் கஷ்டப்பட்டிருக்கும்போது கனம் வானமாமலைப் பிள்ளை அவர்கள் ஒரு முறை வெம்மைக் குளிப்பு வைத்தியம் செய்வித்தார்கள். அந்த மருத்துவத்தால் நோய் பூராவும் குணமாய்விட்டது தவிரவும் தேக சுகத்தையும் மிகவும் நல்ல நிலைமைக்குக் கொண்டுவந்திருக்கிறது. P. R. வானமாமலைப் பிள்ளை அவர்களிடம் மருத்துவச் சம்பந்தமான பூரண அறிவும் ஆற்றலும், அநுபோகமும், நோயாளர் வேண்டும்போது ஒழுங்குபடக் கவனிக்கும் தன்மையும் உண்டு.

சர். வி. டி. கிருஷ்ணமாச்சாரி,

பரோடா திவான்.

கனம் வானமாமலைப் பிள்ளை அவர்களின் வைத்தியத்தை நான் அடிக்கடி மாஸேஜ், வெப்பக்காற்று குளிப்பு மூலம் செய்திருக்கிறேன். மாஸேஜும், வெப்பக் காற்றுக் குளிப்பும் தேகத்தைப் பலப்படுத்துவதிலும், பல இடங்களிலுள்ள வியாதிகளைக் குணம் பண்ணுவதிலும் மிகவும் பிரயோசனமானவை.

சர். அல்பியம். ஏ. ஆர். பானர்ஜி,

சி. எஸ். ஐ.; சி. ஐ. இ.; ஐ. சி. எஸ்.;

திவான்.

மைசூர்

"வெப்பக் காற்றுக் குளிப்பு வலியை நீக்குவதில் பிரயோசனமானது. நம்மிடம் இருக்கும் மிக மேலான அழுக்கை வெளிப்படுத்தும் முறைகளில் அது ஒன்று."

டாக்டர். வைட்மன்.

---

கனம் வானமாமலைப் பிள்ளை எனக்கு நன்ருய்த் தெரியும். கடந்த கோடை காலத்தில் வயிற்று நோவுக்காக ஒருமாதமாக அவர்கள் வைத்தியத்தைச் செய்தேன். போதுமான பிரயோசனத்தை அடைந்தேன். ஜல வைத்தியத்தில் அவர்கள் கைதேர்ந்தவர்கள். பல டாக்டர்களிடமிருந்தும், பிறரிடமிருந்தும் நல்ல நற்சாக்ஷிப் பத்திரங்கள் பெற்றிருக்கிருர்கள்.

சர். டி. என். சிவஞானம் பிள்ளை
(சென்னைக் கவர்ன்மென்ட் மந்திரி.)

பாளையங் கோட்டை கனம். வானமாமலைப் பிள்ளை அவர்களை நான் அநேக வருஷங்களாகத் தெரிந்திருக்கிறேன். அவர் நல்ல பேர் பெற்றிருக்கிற ஒரு நீர் மருத்துவர். மற்ற மருந்து முறைகள் குணம் பண்ணுத பல நாட்பட்ட வியாதிகளை அவர் நன்ருய்க் குணம் பண்ணி இருக்கிருர்கள். எனக்குக் கட்டிகள் பல வந்து நான் துன்பப்படும் போதுநானே அவர் வைத்தியத்தை ஒரு முறை செய்தேன். எனக்குக் குணம் ஏற்பட்டது. அவருடைய உடல் பிசைதல் முறை மெல்லனவும், கெடுதல் இல்லாததும் உடம்புக்கு முற்றும் நலனைக் கொடுக்கக் கூடியதாயும் இருக்கிறது. நீர் மருத்துவத்தில் அவரைக் கைதேர்ந்த, நம்பத்தக்க வைத்தியர் என்று நான் சிபார்சு செய்கிறேன். அவருடைய பழக்கமுள்ள பெண் உதவியாளரின் மூலம் பெண்களும் பிள்ளையவர்களின் நீர் மருத்துவத்தைச் செய்து நற்பயனை அடையலாம்.

திவான் பகதுர். **S.** குமாரசாமி ரெட்டியார்
வைத்திய இலாகா மந்திரி,
சென்னைக் கவர்ன்மென்ட்.

சென்னை
(25—8—33)

"எல்லா நோய்களும் இந்த நீர் வைத்தியத்தில் குண மாகின்றன."

டாக்டர். கிரகரி.

---

கனம் வானமாமலைப் பிள்ளை அவர்கள், நான் நிரம்பவும் அசௌகரியமாய் இருக்கும்போது, நீர் மருத்துவத்தின் உடல் தேய்ப்பு, வெப்பக் காற்றுக் குளிப்பு முதலியன எனக்குக் கொடுத்துக் குணப்படுத்தி இருக்கிறார்கள். உடம்பை நன்றாய்த் தெரிந்து, இன்னவை நல்லவை என்று தெளிவாய் உணர்ந்து இருக்கிறார்கள். உடல் தேய்ப்பு நிரம்பவும் நேர்த்தியாகவும் உற்சாகங் கொடுக்கக் கூடியதாயும் இருக்கின்றது. மற்ற முறைகளைவிட இது நன்றாயிருக்கிறது. நாட்பட்ட சில நோய்களுக்கும் அவர்கள் சொல்லுகிறபடி எல்லாக் குணங் களும் ஏற்படும். அவர்கள் குறிப்பிட்ட நேரத்தில் வருபவர் களாயும், உதவி உள்ளவர்களாயும் சிரத்தை உள்ளவர்களாயும் இருக்கிறார்கள். பிறர் இதற்கு அதிக உதவி செய்யவேண்டி யிருக்கிறது. டாக்டர்களும் மருந்துகளும் இல்லாமல் போவது ஒரு பெரிய காரியம். வலுத்த வியாதிகளிலும் அவர்கள் முறை பெருத்த பயனைத் தரும். அவர்களுக்கு நலம்வர விரும்புகிறேன்.

S. சீநிவாச ஐயங்கார்,
அட்வகேட்,
(காங்கிரஸ் தலைவர்.)

மயிலாப்பூர்
11-10-23

ஜல வைத்தியம் வானமாமலைப் பிள்ளை அவர்களை 15 வருஷ காலத்திற்கு மேலாகத் தெரியும். பாளையங் கோட்டை யில் ஜலவைத்தியசாலை வைத்திருந்த டாக்டர் தனக்கோடி ராஜு M. D. அவர்களிடம் ஷை யார் வைத்தியம் பயின்றவர் கள். அவர்களிடம் வைத்தியம் செய்யும்படி பல சந்தர்ப்பங்கள் எனக்கு ஏற்பட்டன். பின்னும் தேவகோட்டையில் இருக்

"வெப்பக் காற்றுக் குளிப்பு எந்த வயதிலும் செய்ய லாம். சுகத்தை அதிகப் படுத்தும். நோய் எவ்வளவு அதிக மாய் இருந்தாலும் குணப்படுத்தும்."

டாக்டர். எராஸ்மஸ் வில்சன்
எம். டி; எப், ஆர். சி. எஸ்; எப். ஆர். எச்.

---

கும் போது எனக்கு விஷ ஜுரம் அதாவது டைபாயிட் வந்து சுமார் ஒரு மாத காலம் கஷ்டப் பட்டுக் கொண்டிருந்தேன். ஒரு வாரமாக ஆஸ்பத்திரி வைத்தியர்கள் வைத்தியம் செய்து குணப்படாமல் இருக்கும் போது என் அதிர்ஷ்ட வசமாக டாக்டர் பிள்ளை அவர்களைக் சந்தித்து 105 டிகிரி காய்ச்சலில் இருந்த என்னை அவர்களிடம் ஒப்படைத்தேன். அவர்க ளுடைய சிகிச்சையினால் எனக்குச் சீக்கிரத்தில் குணம் ஏற் பட்டதோடு மற்ற வேறு வைத்திய முறையில் ஏற்படக் கூடிய பலஹீனம் இல்லாமல் இருந்தேன். அவர்களுடைய கவனிப் பும் சிகிச்சா முறையும் எனக்கு மிகுந்த சந்தோஷத்தை உண் டாக்கின. நான் அறிந்தவரை அநேக அபாயகரமான வியாதி களைக் குணப்படுத்தி நன்மை செய்திருக்கிறார்கள்.

திருநெல்வேலி
28—4—10

டி. சேஷய்யர்
டிப்டி கலெக்டர்.

நான் சிலகாலமாக வாய்வு உபத்திரவத்தால் தொந் தரவை அடைந்து இரவில் தூக்கம் இல்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தேன். அதன்பேரில் கனம் வானமாமலைப் பிள்ளை அவர்களிடம் ஆலோசித்தேன். அவர்கள் மலச் சிக்கலால் உண்டாகிய வியாதிக்கு எனிமாவினால் மலக் குடல் கழுவுதல் செய்து சுத்தமாக்கி வெம்மைக் காற்று குளிப்பு 4 தடவை எடுக்கும்படி செய்தார்கள். மலப்பை சரியானபடி வேலை செய்தது. பின்பு மூன்றுதரம் வெப்பக் காற்றுக் குளிப்புச் செய்தவுடன் என்னுடைய தேகத்திற்குச் சரியான

"நீர் சப்தமான வியாதி அறையில் ஆயிரக்கணக்கான பேர் கொல்லப் படுகிருர்கள்"

டாக்டர். பிராங்க்

---

சுகம் நன்ருய் ஏற்பட்டது. நான் இப்போது 56 வயது உடையவன். மற்ற மருந்துகள் உபயோகப்படுத்தியதில் பலன் அற்றதைக் கண்டேன். டாக்டர் வானாமமலைப் பிள்ளை அவர்கள், நோயாளியை ஒழுங்குபடக் கவனிப்பதிலும் மருத்துவச் சிகிச்சையிலும் மிக்க பயிற்சியடைந்தவர்கள். அவர்கள் தொழிலில் எல்லாம் பயன் அடைவார்கள் என்று நம்புகிறேன்.

குற்ருலம் 22-9-15 } ராமச்சந்திர ஐயர், ரிடையர்ட் தாசில்தார்.

ஜல வைத்தியம் கனம் வானமாமலைப் பிள்ளை அவர்களை அநேக வருஷ காலமாக நான் அறிவேன். அவர்களுடைய சிகிச்சா முறைகளில் மாஸேஜ் என்னும் தேகத்தேய்ப்பும், வெப்பக் காற்றுக் குளிப்பும், தேகத்தைப் பொதிதலுமான சிகிச்சைகள் பலதடவைகள் எனக்குச் செய்யப் பட்டுச் சுகத்தை அடைந்திருக்கிறேன். அந்த மருத்துவம் தேகத்தில் உள்ள கருவிகளைச் சுத்தஞ் செய்து கொடுப்பதோடு கூட, நரம்பு பலயீனமுடையவர்களுக்குப் பலத்தைக் கொடுக்கிறது. நீரழிவு வியாதி உள்ளவர்கள் இந்த வைத்தியத்தைக் கொண்டு அந்த வியாதிகளின் கொடுமையையும், நாளுக்கு நாள் அதிகப் படுவதையும், தடுக்கலாம். பெரிய பிளவை, சிலந்தி முதலியன ஆயுத உபயோக மில்லாமல் இந்த வைத்தியத்தில் உடனே குணமாகி விடுகின்றன; நம்பிக்கையற்ற கெட்ட நிலைமையில் இருக்கிறவர்களுக்குங் கூட இந்த வைத்தியத்தைச் சிபார்சு செய்கின்றேன். சமீபத்தில் எனக்கு உடம்பில் பற்பல பாகங்களில் கொப்பளங்கள் கண்டிருந்தன. ஒரு

"எந்த வியாதி வெப்பக் காற்றுக் குளிப்பில் குணமாகு மென்று நாம் கேட்கவில்லை. ஆனால், எந்த வியாதி இதன் சக்தியை எதிர்த்து நிற்க முடியும் என்று கேட்கிறோம்."

டாக்டர். சர். எராஸ்மஸ் வில்சன்,
**M. D.; F. R C. H.; F. R. S.**
உலகத்தில் பெரியதொரு மருந்து டாக்டர்.

---

கொப்பளம் வலது தொடையில் இருந்தது பெரியதாகி பிளவைக்கு உள்ள அடையாளங்களோடு இருந்தது. அதில் வாய்கள் இருந்தன. ஒரு அங்குலம் நீளம் இருந்தது. ரண நீரால் கழுவப்பட்டுச் சுத்தி செய்யப் பட்டது. ஆனால், குளிர்ந்த தண்ணீர் உபயோகப்படுத்தி சுத்தி செய்தபோது தான் முற்றிலும் சிலந்தி குணமானது. பிறகு, மற்றொரு சிலந்தி இடது முன் கால் சதையில் புறப்பட்டது. அதுவும் அதிக வருத்தந்தந்தது. அதுவும் குளிர்ந்த நீர் கொண்டு குணப்படுத்தப் பட்டது.

வைத்தியம் செய்த நாட்களில் ஒன்றிலேனும் உடம்பில் உஷ்ணம் அதிகரித்ததே கிடையாது. மலம் சரியாய்ப் போய்க் கொண்டும், ஜீரணம் சரியாய் ஆகிக்கொண்டும் இருந்தது. அப்போது சாப்பிட்டது சத்தில்லாத ஆகாரமாய் இருந்தும் அப்படி குணம் இருந்தது. குளிர்ந்த ஜலமும், உஷ்ண ஆகாய ஸ்நானமும் யாதொரு வலி, சாப்பாட்டுக்குறை முதலியன இல்லாமல் வியாதியைத் தீர்க்கும். ஆனால், வைத்தியமுறை இவ்வளவு இலேசாய்த் தோற்றுவது எப்படிக் குணம் தரும் என்று நினைத்துவிடக் கூடாது.

வானமாமலைப் பிள்ளை அவர்களிடம் இந்த முறையைப் பற்றிய போதுமான அநுபோகம் இருக்கிறது. இந்த முறையினால் அநேக வியாதியஸ்தர்களைக் குணமாக்கி இருக்கிறார்கள். டாக்டர் அப்பாவு பிள்ளை அவர்கள் இந்த முறை

"நாகரிக வாழ்க்கையில் மானிடரில் 10-க்கு 7 பேருக்கு மலச்சிக்கல் இருக்கிறது"

டாக்டர். டர்னர் எம். டி.

---

யைத்தான் தன்னிடம் ஆலோசிக்கும்படி நோயாளர்களாய் உள்ள நண்பர்களிடம் சிபார்சு செய்வதுண்டு.

திருநெல்வேலி 6-10-17 } ராவ் பகதூர் A. சுந்தர சாஸ்திரி, பப்ளிக் பிராசிகூடர்.

பாளையங்கோட்டை ஜல வைத்தியர் P. R. வானமாமலைப் பிள்ளை அவர்கள் செய்கிற தேகத் தேய்ப்பு என்னும் மாஸேஜ் முறையை நான் சில மாதங்களாக உபயோகப் படுத்திப் பார்த்தேன். குறிப்பிட்ட நோய்க்கு இல்லாவிட்டா லும் தேகசுகம் அதிலிருந்து அதிகப்படுவதைக் கண்டேன்.

திவான் பகதூர். டி. இரங்காசாரி, பி. ஏ., பி. எல்.,

ஜல வைத்தியர் பி. ஆர். வானமாமலைப் பிள்ளை அவர் களை இவ்விடத்தில் கண்டு சிறிதுகாலமாக அவர்களுடைய வெம்மைக் குளிப்பு என்னும் வைத்தியத்தையும், மாஸேஜ் என்னும் தேகத் தேய்ப்பையும் செய்துகொண்டேன். அவற் ருல், என்னுடைய தேகம் சுத்தமும் மனம் சந்தோஷமும் பெற்றன.

திருவனந்தபுரம் 15-2-30 } பரமேஸ்வரம், B A. B. L. M. L. C. அட்வகேட்.

கனம் வானமாமலைப் பிள்ளை என்னோடு பல வருஷம் பழகியவர். டாக்டர் தனக்கோடி ராஜு அவர்களிடம் நான் ஜல வைத்தியம் செய்து கொண்டேன். அவ்வைத்தியம் எனக்கு மிகுந்த சுகத்தைக் கொடுத்தது. வானமாமலைப் பிள்ளை மேற்கூறிய வைத்தியரிடமிருந்து இந்த வைத்தியத் தைக் கற்றுக் கொண்டார். அவர்களிடமும் நான் சில தடவை

"பத்தாயிரம் தடவை பத்தாயிரம் முறைகளைக் கொண்டு நீரழிவு நோயைக் குணமாக்க முடியவில்லை"

கிளார்க்கு **M. D.**

---

களில் வைத்தியஞ் செய்து கொண்டேன். அது உடம்பிற்கு வலுவைத் தருகிறது. வானமாமலைப் பிள்ளை ஜல வைத்தியத்தில் கைதேர்ந்தவர். ஆதலால், அவர்களிடம் யாவரும் நம்பிக்கையுடன் மருத்துவம் செய்து கொள்ளலாம்.

திவான் பகதூர். A. S. அப்பாசாமி
மிட்டாதார்.

P. R. வானமாமலைப் பிள்ளை அவர்களின் மேற்பார்வையில் ஒரு முறையாகத் தேகத் தேய்ப்பு என்னும் வைத்தியம் செய்து கொண்டேன். அதிலிருந்து எனக்கு விசேஷ நன்மை கிடைத்தது. தேகத் தேய்ப்பானது தேகத்துக்குச் சுத்தத்தையும் குதூகலத்தையும் உண்டாக்கியது. மெலிவாய் இருப்பவர்களுக்கு இந்த வைத்தியம் செய்து கொள்ளும்படி நான் பலமாய்ச் சிபார்சு செய்கிறேன்.

ராவ் பகதூர். T. ஆழ்வார் செட்டி.
18—3—19.

நான், சிலகாலம் மாஸேஜ் என்னும் வைத்தியத்தையும், நீராவிக் குளிப்பையும் ஜலவைத்தியர் கனம் P. R. வானமாமலைப் பிள்ளை அவர்களிடம் செய்துகொண்டேன். அவர்களால் வரையறுத்தபடி பூராவும் அந்த வைத்தியம் செய்துகொள்ள என்னுடைய அவசரமான வேலை இடங்கொடுக்கவில்லை. அந்த வைத்தியத்தால் தேகசுகம் விருத்தியானதாய்த்தான் சொல்ல வேண்டும்.

தூத்துக்குடி
3-9-22

சி. வ. நல்ல பெருமாள் பிள்ளை, மிட்டாதார்,
முனிசிபல் சேர்மன்.

"வெப்பக் குளிப்புச் செய்யும் கருவி மிகவும் வியப்பானதும் வியாதியைக் குணஞ் செய்வதில் இணையற்ற பலனைக் கொடுக்கக் கூடியதுமானதென்று நான் நினைக்கிறேன்".

டாக்டர். சர். தாமஸ் வாட்ஸன் பார்ட், M. D
L. L. D. C. L

---

கனம், வானமாமலைப் பிள்ளை அவர்கள் செய்து வருகிற முறைப்படி ஒருவாரம் வெம்மைக் குளிப்புச் சிகிச்சை செய்தேன். அதிலிருந்து சில காலமாக நான் கஷ்டப் பட்டுக் கொண்டிருந்த அன்ன துவேஷம் பூராவும் குணமாய் விட்டது. அந்த வியாதிக்கு ஒரு மனிதன் வைத்தியம் செய்து கொள்ள வேண்டுமானால் இதைத் தவிர வேறு வைத்தியம் நன்றாயிராது, என்று நான் நம்புகிறேன்.

திருநெல்வேலிப் பாலம்
28—4—18

R. ராமராவ் B A B L
அட்வகேட்

கனம் வானமாமலை பிள்ளை அவர்கள் நல்ல குணமும், நண்பர்கட்கு உதவும் இயல்பும் உடையவர். அவர்களிடம் மருத்துவம் செய்யும் முன் எனக்கு நரம்புபற்றிய தலைவலி இருந்தது. அது முற்றிலும் நீங்கி விட்டது.

மதுரை
6—11—10

வேணுகோபால் நாயுடு,
ஜில்லா ரிஜிஸ்ட்ரார்

கனம் வானமாமலைப் பிள்ளை அவர்களிடம் நான் ஜல வைத்தியம் செய்து மிக்க அநுபவம் பெற்றேன். குளிப்பதற்கு முன் உடம்பைத் தேய்ப்பது அவருடைய தேர்ச்சியை விளக்கும், உடம்பிலுள்ள சதைகளில் அவருடைய கைவிரல்கள் இலேசாயும் சாதுர்யமாயும் செல்வதால், வானமாமலைப் பிள்ளை அவர்கள் சரீர தத்துவம் படித்த ஒருவருடைய தேர்ச்சி முழுமையும் உடையவராய் இருக்கிறார். இடத்துக்

"நாம் தேடவேண்டிய எல்லாரிலும் பெரியவர் வெப்பக் காற்றுக் குறிப்பு வைத்தியரே."

லாங்கரி.

---

குத் தக்கவாறு மெதுவாகவும் வலுவாகவும் உடம்பைப் பிசைவதால் இரத்த ஓட்டம் தடங்கல் படாது இருக்கவும், சுவாசம் விரைவாயும் தீர்க்கமாயும் இருக்கிறது. எந்த வியாதியும் பிள்ளை அவர்களின் சிகிச்சை முறையில் குணமாகும் என்று எனக்குப் படுகிறது. அதிக காய்ச்சல் மண்டை இடி, அன்னத் துவேஷம், மூலமுளை, குஷ்டம், முதலிய வியாதிகளுக்கு வைத்தியம் செய்து திருப்தியாய்க் குணப் படுத்தி இருக்கிறார்கள்.

பாளையங்கோட்டை
11—4—11

S. ராமகிருஷ்ண ஐயங்கார்,
அட்வகேட்

டாக்டர். வானமாமலைப் பிள்ளை அவர்களை நான் திருவனந்தபுரத்தில் வைத்துப் பார்க்கும்படி நேர்ந்ததற்காக நானே எனக்குச் சுப சோபனம் சொல்லிக் கொள்ளுகிறேன். அவர்கள் சில வெம்மைக் குளிப்பும் தேகத் தேய்ப்பும் கொடுத்தார்கள் என்னுடைய தேகம் சுத்தமாக்கப் பட்டு நல்ல நிலைமைக்கு வந்திருக்கிறது. நான் இன்னும் உபயோகப் படுத்திக் கொள்ளக் கூடாமல் வேறு இடங்கட்குப் போகவேண்டி இருப்பதற்காக வருத்த மடைகிறேன். அவர்கள் செய்யும் வைத்திய முறை பலருக்கும் நன்மையைத் தராமல் இராது என்பது உண்மை.

திருவநந்தபுரம்
13—9—21

R. வைத்தியலிங்கம்,
போலீஸ் சூபரென்டென்டு

சென்ற இரண்டு மாதங்களாக மூலமுளை என்னும் உபத்திரவத்தால் இரத்த இழிவு ஏற்பட்டுப் படுக்கையி லிருந்து மிகவும் கஷ்டப் பட்டுக் கொண்டிருந்தேன். அநேக வைத்தி

"பித்தாசயம், மூத்திரக் கருவி சம்பந்தமான நோய்கள் ஆகியவற்றை அகற்றுவதிலும் வெப்பக் காற்றுக் குளிப்பின் குணங்கள் விசேஷமாகக் கவனிக்கப்படத் தக்கவை. மூத்திரப்பையில் கல்லிருத்தல், பித்தாசய வேலை சரியாய் இல்லாதிருத்தல் முதலியன வெப்பக் காற்று குளிப்புச் செய்த வுடனே குணம் பண்ணப்படுகின்றன."

டாக்டர். சர். ஜான் பைப், M. D., F. R. S.

---

யங்கள் செய்தும் வீணாயின. நான் மிகவும் அபாய ஸ்திதியிலிருக்கும் போது டாக்டர் வானமாமலைப் பிள்ளை அவர்கள் என்னுடைய வியாதிக்குச் சிகிச்சை செய்ய ஒப்புக் கொண்டு முதல் நாள் செய்த உடனேயே சுகங் கிடைக்க ஆரம்பித்தது. நான் ஒவ்வொரு நாட்களிலும் இருபது தரம் இரத்தமும் சீழும் போய்க்கொண் டிருப்பதைக் கண்டேன். அதனால், கடுப்புத் தொந்தரையும் தேகத்தைப் பலஹீனம் அடையும்படி செய்தன. ஒரு வாரம் ஜல வைத்தியம் செய்த உடனேயே என்னுடைய பழைய பலத்தையும் போதுமான பசி எடுக்கும் சக்தியையும் அடைந்து இப்போது சுகமும் சந்தோஷமும் உடையவனாய் இருக்கிறேன். டாக்டர் பிள்ளை அவர்கள் நன்மையில் குற்ற மற்றதும் காப்பாற்றக் கூடியதுமான இந்த முறையைக் கொண்டு இவ்விடம் பலரும் வைத்தியம் செய்வார்களென்று நம்புகிறேன். வயது 62.

மிராண்டா.

திருவனந்தபுரம் — ரிடையர் ஓவர்சியர் P. W. D.

13—9—21

சில வாரங்களுக்கு முன் இந்த ஊரில் ஜல வைத்தியர் கனம் வானமாமலைப் பிள்ளை அவர்களோடு நெருங்கிப் பழகினேன். அவர்களுடைய வியர்வைக் குளிப்பின் முறையை

"நீராவிக் குளிப்பை வழக்கமாய்ச் செய்து கொள்கிற இடங்களில் இரத்த சம்பந்தமான, தோல் சம்பந்தமான வியாதி எதுவேனும் கிடையாது. எல்லாவித புண்களும் குணம் பண்ணப்படுகின்றன. இதை முறையாகவும் விவேக மாகவும் செய்து கொண்டால் வாதம், பக்க வாதம், முடக்கு வாதம் முதலியன இல்லாமற் குணம் பண்ணக்கூடும்.

இங்கிலாந்தில் மிகுதியாய்ப் பரவி இருக்கும் ஆபத்கர மான க்ஷய ரோகம், இருமல் நீராவிக் குளிப்பை உபயோகிக் கிற இடங்களில் காணப்படவில்லை. இருப்பின் முற்றிலும் குணம் பண்ணப் பட்டும் போகிறது.

பிரபசர். டி. அர்க்கு ஆர்ட் M B.

---

என்னுடைய இரண்டு நண்பர்கள் உபயோகப் படுத்தும் போதும் அதற்குப் பின்னும் தேகத்தில் உண்டாகும் குதூகல மும் தேக சுகத்தைப் பற்றியும் புகழ்ந்து பேசினார்கள். என் பக்கத்து வீட்டுக்காரருடைய ஐந்து வயதுடைய பெண் குழந் தைக்குத் தேகத்தில் உயிர்த்தலத்தில் ஒரு கட்டி வந்து கஷ் டப் பட்டுக் கொண்டிருந்தது. அது வரையில் வலியினால் கஷ்டப்பட்ட அக்குழந்தை ஒரு முறை சிகிச்சை செய்ய ஆரம்பித்தவுடனே அன்று இரவே சுகமாய்த் தூங்கியது. மறு நாட் காலையில் அந்தக் கட்டி உடைந்தது. பின்பு இரண்டு நாள் ஜல வைத்திய முறையில் பூராவும் குணமாய் விட்டது. நான் அந்த வைத்தியம் செய்யும்போது பார்த்துக் கொண் டிருந்தேன். இவ்வளவு இலேசானதும் குற்றமற்றதுமான இந்த முறையைப் பார்க்க எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

திருவநந்தபுரம்<br>கொல்லமாண்டு<br>1096. ஆடிமீ 9உ

பி. பப்புப் பிள்ளை<br>ரிடையர்ட் சுபேதார்

நான் ஒரு முறையாக வெம்மைக் குளிப்பு என்னும் வைத் தியத்தைக் கனம் வானமாமலைப் பிள்ளை அவர்களின் மேற்

"வெப்பக் காற்றுக் குளிப்பு மிகவும் குணத்தைத் தரு கிறது. எளிதான, ஆனால் நல்ல பிரயோசனம் தரக்கூடிய குணத்திலிருந்து சகலராலும் உபயோகப் படுத்தப்பட்டது. அநேக நாள்பட்ட வியாதிகளைத் திருப்திகரமாகவும், மிக்க பிரயோசனத் தோடும் குணம் பண்ணலாம் என்று தீர்மா னிக்கப் படுகிறது. எந்த விதத்திலும் அபாயமில்லாதது. ஏனென்றால், வெந்நீர் குளிப்பதைவிட இது ஒவ்வொரு விஷ யத்திலும் மேலானது. ஆகையால், அபாயத்தை வெந்நீர்க் குளிப்பு உண்டு பண்ணக்கூடிய இடங்களில் இதை உபயோ கப் படுத்திப் பிரயோசனத்தை அடையலாம்."

டாக்டர். சர். ஆண்டுரு கிளர்க்

**M. D M. R. C. S.**

லண்டனிலுள்ள ரைட் ஹானரபுள் **W. E.** கிளாட்ஸ னுக்கு வைத்திய சிகித்சையில் சிறந்த அபிப்பிராயம் சொல் பவர்.

---

பார்வையில் குறிப்பிட்ட வியாதிக்காக இல்லாவிட்டாலும் உப யோகப் படுத்திக் கொண்டேன். அந்தக் குளிப்பு உற்சாக மும், குதூகலமுமாய் இருந்தது. இது தேகத்தைச் சுத்தம் செய்து சுகத்தை அதிகரிக்கும்படி செய்தது.

சென்னை — ஆராவமுது ஐயங்கார்

17—10—20 (சர். கே. சீனிவாச அய்யங்கார் அவர்கள் மகனார்)

## ஐரோப்பிய அரச குடும்பத்து வைத்தியர்.

சகலரும் நன்கறியப் பட்டவரும் கீர்த்தி வகித்தவருமான பாளையங்கோட்டை டாக்டர் தனக்கோடி ராஜு அவர்களுக்கு உதவியாயிருந்து பயின்ற வானமாமலைப் பிள்ளை அவர்களால், நான் சுமார 12 முறையாக வெம்மைக் குளிப்பு என்னும் வைத் தியத்தைப் பெற்றேன். அதிலிருந்து என்னுடைய தேகசுகம்

"மிக்க சுகத்தைக் கொடுக்கக் கூடியதும், ஆநந்தமான தும், சுத்திசெய்யக் கூடியதுமான துருக்கிக் குளிப்பு (அல்லது வெப்பக் காற்றுக் குளிப்பு) நன்மையை இந்தக் காலத்தில் ஒவ்வொருவரும் உணர்கிறார்கள். இது, இரத்த ஓட்டத்தை நெறிப்படுத்துகிறது. இதன் பலன்கள் மாறு படாமல் நிலைத் திருப்பவை.

மிகவும் கேவலமாய்ப் போன நரம்பு நோய்களும் வாத மும் இந்த வைத்திய முறையைக் கண்டால், ஒடுங்கி விடுகின் றன. தோல் சுத்த மாகவும் மெல்லிய தாகவும், மிருது வாக வும், பட்டுப் போலப் பளப்பளப் பாகவும் ஆகிவிடுகிறது. கழிவை வெளியாக்கி உற்சாகத்தை உண்டு பண்ணித் தோற் படைகளும் இரத்த வியாதிகளையும் காணமற் போக்கி விடு கிறது.

பித்தா சயம், மூத்திரக் கருவி, சம்பந்தமான வியாதிகள் மிகவும் கொடூரமான நிலையில் மருந்து வைத்திய மில்லாமல் குணம் பண்ணப் பட்டதை நான் பார்த்திருக்கிறேன்."

டாக்டர். S. ஆமில்டன்

---

மிகவும் விருத்தியடைந்தது, தேகத் தேய்ப்பு என்னும் வைத் தியம் மிகவும் மேன்மை யானது. அவர்களுடைய ஜல வைத் தியமானது ஈடு சொல்லக் கூடியது அல்ல. நான் சமீபத்தில் டெல்லியிலும் பம்பாயிலும் கல்கத்தாவிலும், நீராவிக் குளிப்பு என்னும் வைத்தியம் செய்து கொண்டேன். ஆனால், இவர் களுடையது ஒப்புவமையற்றது. நான் மிகவும் நம்பிக்கையோடு நீடித்த வியாதியுள்ள எந்த வியாதியாளருக்கும் சிபார்சு செய்கிறேன்.

ஸ்ரீமான் காந்திமதிநாதம் பிள்ளை

திருநெல்வேலி }
1—1—1919 }

"பிற வைத்திய முறைகளுக்கு எல்லாம் உயர்ந்த படியாக வியாதியைக் குணம் பண்ணக் கூடிய ஒரு வல்லமை இந்த குளிப்புக்கு இருக்கிறது. எவ்வளவு கொடூரமான வலியாயினும், அது 140 டிக்ரி வெப்பக் காற்றுக் குளிப்பால் 15 அல்லது 20 நிமிஷத்திற்குள்ளாகக் குறைந்து விடும். உடம்பிலுள்ள அழுக்குப் பொருள்களைச் சுத்தி செய்யக் கூடிய சக்தியை உடைய உஷ்ணத்தை உபயோகிக்கும் முறையைத் தழுவாமல், பலர் ஒரு பெரிய சங்கடமான வியாதியை சிறிய சங்கடமான மருந்தைக் கொண்டு குணம் பண்ணி விடலாம் என்று மருந்து முறையைக் கைப்பற்றி வருகிறார்கள்.

டாக்டர் டன்லப், **M. R. I. A.**

---

சிறிது மாதத்திற்கு முன் எனக்குத் தொப்புளில் பிளவை ஏற்பட்டு இங்கிலீஷ் வைத்தியம் செய்யும்படி ஏற்பட்டது பூரா வியாதி நிவர்த்தியாக வேண்டியதற்காக ஆபரேஷன் செய்துகொள்ள வேண்டுமென்று டாக்டர்கள் சொன்னார்கள். அதனால் ஏற்படக்கூடிய தொந்தரவை உத்தேசித்து வெகு காலமாக ஜல வைத்தியம் செய்து வருகிற **P. R.** வானமாமலைப்பிள்ளை அவர்களைக் கலந்து கொண்டேன். அவர்கள் குளிர்ந்த ஜல பிரயோகத்தை அநுஷ்டிக்கச் சொன்னார்கள் அது எப்படிச் சாத்தியம் என்று நான் நினைத்த போதிலும் அவர்கள் ஜல வைத்திய முறையில் தேர்ச்சி உள்ளவர்கள் என்று எனக்குத் தெரிந்தபடியால், இதற்கு இணங்கினேன். முதல் சிகிச்சையிலேயே எனக்கு ஏற்பட்டிருந்த உபத்திரவம் நீங்கி, நாலுமணி நேரத்திற்குள் பிளவை உடைந்து சீழ் வெளி வந்து விட்டது. சொற்ப தினத்திற்கு உள்ளாகப் பூரா வியாதியும் குணமாய் விட்டது. அதாவது உஷ்ண ஆவி ஸ்நானத்தாலும் குளிர்ந்த நீர் சிகிச்சையாலும் ஏற்பட்டதாய் இருக்கிறது. வாஸ்தவத்தில் எனக்கு ஷை சிகிச்சை முறையினல்

"நான் வைத்தியம் செய்த பல விஷக்கடிகளெல்லாம் வெப்பக் காற்றுக் குளிப்பில் குணம் பண்ணப்பட்டிருகின்றன. பாம்புக் கடியினால் ஏற்பட்ட விஷம் சாதாரணமாய் ஒரு குளிப்பிலேயே வெளியாக்கப் படுகிறது. ஒருவனுக்கு அம்மைக்குத்தி அப்புறம் ஒரு குளிப்புச் செய்வதால், அம்மைக் குத்துதலின் குணம் முறிந்து விடும்."

டாக்டர். சாஸ். H. கஷப்பர்

---

புதிய ஊக்கமும் நல்ல ஆரோக்கியமும் ஏற்பட்ட தென்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். ஷை பிள்ளை அவர்களுடைய சிகிச்சை முறை இரத்தத்தைச் சுத்தப்படுத்துவதில் நிரம்பவும் நல்லதென்று நம்புகிறேன்.

பாளையங்கோட்டை 21—4—11 M. சுப்பிரமணிய பிள்ளை டிஸ்டிரிக்ட் போலீஸ் ஆபீஸ்

வானமாமலைப் பிள்ளை அவர்களை எனக்கு வெகுகாலமாகத் தெரியும். பிணியாளரை அவர்கள் ஜல வைத்திய முறைப்படி மருத்துவம் செய்து மிகவும் திருப்திகரமாய்ச் சிகிச்சை செய்கிறார்கள். எனக்கு முதுகில் பெருங் கட்டிகள் கண்டிருந்தது. நான் மிகவும் துன்பம் அடைந்தேன். இங்கிலீஷ் மருந்து வைத்தியர் ஒருவர் கட்டிகளை அறுத்துக் குணம் பண்ணவேண்டும் என்றனர். அப்படிச் செய்ய எனக்கு மனம் இல்லாமல், எனது நண்பர் டாக்டர் அப்பாவு பிள்ளை அவர்களைக் கலந்து பேசியதில் அவர்கள் கனம் வானமாமலைப் பிள்ளை அவர்களிடம் சிறிது காலம் மருத்துவஞ் செய்து கொள்ளுதல் நலம் என்றும் கூறினார்கள். அவ்வண்ணம் இந்த ஜல வைத்தியம் செய்து கொண்டேன். சொற்ப தினங்களுக்குள் ஷை கட்டிகள் யாவும் மறைந்து நான் முற்றிலும் குணப்பட்டேன். பலமும் அதிகரித்தது. வானமாமலைப் பிள்ளை அவர்கள் நோயாளரை விசேஷ ஜாக்கிரதையுடன் நன்கு கவ

"வைத்திய இலாக்கா அதிகாரிகள் வெப்பக் காற்றுக் குளிப்பைப் பற்றிய விவரத்தை முற்றிலும் அறிந்தால் அதை அதிகமாய்ச் செய்யும்படியாகவும் மருந்து சரக்கைக் கொஞ்ச மாக உபயோகிக்கும்படி யாகவும் நோயாளர்க்குத் தெரிவித்து, இப்பொழுதைவிட மிகுந்த பயனைச் செய்வார்கள்."

டாக்டர். ஓயி. A. ஸாயர்.

---

னித்து மருத்துவம் செய்யும் முறை எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது. பல கொடும் பிணிகளைத் திறமையுடன் போக்கிய தாகச் சொல்லப்படுகிறது. ஆகையால் முழுமனத்தோடும் நான் பொது ஜனங்களுடைய ஆதரவுக்குச் சிபார்சு செய் கிறேன்.

J. R. சுந்தரமய்யர்

திருநெல்வேலி } பென்ஷன், செஷன்ஸ், டிக்டிரிக்ட் கோர்ட் சிரஸ்ததார்.

ஜல வைத்தியர் கனம் வானமாமலைப் பிள்ளை அவர்களை எனக்கு வெகு காலமாகத் தெரியும். அவர் புகழ்பெற்ற டாக்டர் தனக்கோடி ராஜு அவர்களிடம் ஜல வைத்தியம் நன்கு பயின்றவர். நான் என்னுடைய அறுபதாம் வயதில் இரண்டு மூன்று ஜல வைத்திய குளிப்புக்கள் குளித்தேன் என்னுடைய உடம்பு முற்றிலும் மிகுந்த கொப்பளங்களும் சொறி சிரங்குகளும் மறைந்து பலவீனமும் நீங்கியது. இரத் தம் சுத்தியாகிப் புதிய வலிவு உண்டாயிற்று. நான் சிபார்சு செய்த பல நண்பர்களுக்கும் ஜல வைத்திய குளிப்பாலுண் டாகும் நன்மைகளை எய்தினர். பொது ஜனங்களுடைய ஆதர வுக்கு இம்மருத்துவத்தை மிகவும் மகிழ்ச்சியுடன் சிபார்சு செய்கிறேன்.

திருநெல்வேலி } P. M. சண்முகம் பிள்ளை உசூர் கஜானு.

"தேகா ரோக்கியத்தைக் காப்பாற்றுவதில் வியர்வை வெளியேறுவது மிக்க பலன் தரும் என்றும், நாட்பட்ட கெட்ட நோய் நொடிகளைக் குணப்படுத்துவதும் வியர்வையின் மூலமாகவே என்பதும், பண்டைய வைத்திய சரித்திரம் தொடங்கிய காலமுதல் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது."

டாக்டர். பார்டர் M. D.

---

நான், சுமார் 8 வருஷங்களாக நீர் ரோகத்தினால் கஷ்டப் பட்டு இங்கிலீஷ் வைத்தியம், ஆயுள்வேத வைத்தியம், யூனானி வைத்தியம் எல்லாம் செய்து பார்த்து, ஒன்றிலும் குணம் அடையாமல் போனதோடு கூட நாளுக்குநாள் பலஹீனம் அதிகப்பட்டு இரண்டு பர்லாங்குகூட நடக்கச் சக்தியற்றுக் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் சமயத்தில் தெய்வாதீனமாக டாக்டர் P. R. வானமாமலைப் பிள்ளை அவர்களைச் சந்திக்க நேர்ந்தது. அவர்களிடம் வைத்தியம் செய்யும்படி சொன் னார்கள். நானும் உடனே சம்மதித்து வைத்தியம் செய்ய ஆரம்பித்தபோது எனக்குப் பகலும் இரவுமாகச் சேர்ந்து சுமார் 25 தடவை குறையாமல் நீர் பிரிந்து கொண் டிருந்தது, அவர்கள் இடைவிடாமல் 3 மாதம் வைத்தியம் செய்துகொண்டதன் பலனாக, இப்பொழுது இரவும் பகலு மாகச் சுமார் 10 தடவைக்குக் குறைந்து வந்திருக்கிறது. பனிக்காலம் குறைந்தால் இன்னும் குறையும் என்ற நம்பிக் கையும் இருக்கிறது. முன்பு 2-பர்லாங்குகூட நடக்கச் சக்தியற்று இருந்த நிலைமை போய், இப்பொழுது நாள் தோறும் காலையிலும் மாலையிலும் சேர்ந்து 8 மைல் நடந்து வருகிறேன். அதில் யாதொரு சிரமமும் இல்லை. உற்சாகமும் உண்டாகிறது. இவற்றுடன் தினசரி சுமார் முக்கால்மணி நேரம் தேகாப்பியாசம் செய்யக்கூடிய சக்தியும் எனக்குக் கிடைத்ததால் அந்த அப்பியாசத்தை விடாமல் செய்து

"வாத வியாதியை இந்த குளிப்புக்குக் குணம் பண்ணக் கூடிய முழு ஆற்றல் இருந்து வருகிறது. வாதத்திற்காகச் சிகிச்சை செய்யப்பட்ட இவ்விடத்தில் 3000 பேருக்கு அதிகப்பட்ட வியாதியஸ்தர்களில் 100-க்கு 95 பேர் வீதம் குணம் பண்ணப் பட்டுப் பெரும் பயன் அடைந்திருக்கிறார்கள். இருபது வருடங்களுக்கு முன் வைத்தியஞ் செய்து கொண்ட சிலர் வைத்தியம் செய்து கொண்டது முதல் வாதத்தின் அற்ப அறிகுறியேனும் அவர்களுக்கு ஏற்பட்டதில்லை என்று தெரிவித்திருக்கிறார்கள்."

டாக்டர், சாஸ், H. ஸேப்பார்ட்ஸ்
புரூக்ளினியிலுள்ள பெரிய நூலாசிரியர்.

---

வருகிறேன். இந்த ஜல வைத்தியத்தில் எனக்கு ஏற்பட்ட அநுபோகத்திலிருந்து நீர் ரோகத்துக்கு ஜலவைத்தியத்திற்கு நிகராக வேறு எந்த வைத்தியத்தையும் சொல்ல முடியாதென்ற முடிவுக்கு நான் வந்திருப்பதால் என்னைப்போல நீர் ரோகத்தில் கஷ்டப்படுகிற சகோதரர் சகோதரிகளுக்கு இந்த வைத்தியத்தைக் காலதாமதமின்றி உடனே செய்து சரீர ஆரோக்கியத்தைப் பெற்றுச் சுகவாழ்வை எய்தும்படிக்கும் அதன் மூலமாக இந்த வைத்தியத்தை ஆதரிக்கும்படிக்கும் இதன் மூலமாகச் சிபார்பு செய்கிறேன். ஜல வைத்தியம் செய்கிற அநுபோகமுள்ள டாக்டர்கள் அதிகப் பட்டு, இவர்களை ஆதரிக்கும் நோயாளிகளும் முந்துவார்களானால் இந்த நோய் வேரற்றுப் போகும் என்ற முழுநம்பிக்கையும் இருக்கிறது. எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக.

S. K. நாராயணசாமி பிள்ளை
(ஹைகோர்ட் வக்கீல் N. A. V. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் குமஸ்தா)
மேலவூர்

தூத்துக்குடி
17—2—23

"இந்த நாள்வரை விஷக்கடியைக் குணம் பண்ணக்கூடிய முறை எதுவேனும் கண்டு பிடிக்கப்படவில்லை. வெப்பக் காற்றுக் குளிப்பு விஷக்கடியைப் பரவ விடாதபடி தடுக்கிறது; அதைக் குணம் பண்ணவும் செய்யும். குணத்திற்கு ஒரு குளிப்புத் திருப்தியான தல்ல, அபாய மில்லாதபடிக்குப் பல தடவைகள் செய்து கொள்வது நல்லது.

டாக்டர். புயிஸன்
பிரபலமான மருந்து வைத்தியர்.

---

65 வயதுள்ள எனது தயாருக்கு வைத்தியம் செய்து குணம் கொடுத்த டாக்டர் P. R. வானமாமலைப் பிள்ளை அவர்களின் ஆச்சரியமான சிகிச்சையைப் பற்றிப் பிறர்க்குத் தெரிவிக்க எனக்கு நிரம்பவும் விருப்பம் இருக்கிறது.

திடீரென என் அன்னை கீழே விழுந்து விட்டார். அதனால் 3 நாளாக ஆயாசமும் புத்தி மயக்கமும் எரிச்சலும் நரம்பு வலியும், என் தாயாருக்கு ஏற்பட்டன. இரவிலே தூங்க முடியாமல் இருந்தார். பட்டம் பெற்ற டாக்டர்களிடமும் ஆயுர்வேத வைத்தியர்களிடமும் சிகிச்சை செய்யப்பட்டது. அவர்கள், அன்னைக்கு நரம்புதளர்ச்சியினால் உண்டான பக்கவாதம் என்று சொன்னார்கள். அந்த வைத்தியர்களுடைய சிகிச்சையில் எனக்குத் தெரிந்த மட்டில் ஒரு பிரயோசனமும் அவ்வளவாய் ஏற்படவில்லை. அல்லாமலும் பல ஹீனமும் அதிகப்பட்டு அபாய நிலைக்குக் கொண்டு வரப்பட்டாள்.

இந்தச் சமயம் நான் டாக்டர் வானமாமலைப் பிள்ளை அவர்கள் பாளையங்கோட்டைக்கு வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு அவர்களிடம் வைத்தியம் செய்யும்படி கேட்டுக் கொண்டேன். அவர்களும் அப்படியே ஒழுங்காகச் சிகிச்சை கொடுத்தார்கள். வைத்தியம் செய்த இரண்டாம் நாளிலேயே என் தாயாருக்குச் சௌகரியமும் சாதாரணமாய் எழுந்தி

"உள் மருந்தைவிட உஷ்ண ஆகாயம் அல்லது ரோம தேசத்துக் குளிப்பு நித்திரை இல்லாமல் இருக்கும் போது நல்ல பிரயோசனத்தைக் கொடுக்கின்றது."

பிரபசர்-ஆச்டின் பிளின்ட் M. D.

---

ருந்து சிறிது பேசும்படியான பலமும் ஏற்பட்டது. உண்மையில் நான் நிரம்ப ஆச்சரியப் பட்டு டாக்டரிடமே என் தாயாரின் உயிரை ஒப்பு வித்தேன். 5 தினத்தில் அபாயம் ஒழிந்து, தைரியம் ஏற்பட்டு இரவில் தொந்தரையின்றி நித்திரை செய்யும்படியான குணம் ஏற்பட்டது

நான், பக்கவாத வியாதியஸ்தர்களுக்கு உடனே இந்த தொந்தரையில்லாத இலகுவான வைத்திய முறையைப் பின்பற்றிச் சுகம் எய்தும்படி சிபார்சு செய்கிறேன்.

டி. எ. பிள்ளை

பாக்டாட் 17—2—23 } கிளர்க் E. & M. செர்விஸ்.

எனக்குத் தலைவலி நாலைந்து நாளாக இருந்தது. ஓரிரவில் மிகப் பலஹீனமாய்ப் பேச முடியாமல் கால், கை, மடக்க முடியாமல் போயின. கண்கள் கனமாயும் பார்க்க முடியாமலும் இருந்தன. காலையில் குடும்ப வைத்தியரை என் மனைவி கூட்டி வந்து பார்த்ததில், அவர் மலச்சிக்கல் காரணமென்றும், நரம்புத் தளர்ச்சியால் ஏற்பட்ட வியாதி என்றும் சொல்லிப் பேதியாக மருந்து கொடுத்தார்.

நடுப்பகல் வரையில் பேதியாகாமல் மோசமான நிலைமையில் இருந்தது. வயிறு உப்பி விட்டது. அப்போது, ஒரு நண்பர் சொன்னதின் பேரில், கனம் டாக்டர் வானமாமலைப் பிள்ளை அவர்களைக் கொண்டு ஆலோசித்தேன். அவர்கள் எனக்குத் தைரியம் சொல்லி எனிமா கொடுத்தார்கள் உடனே வயிறு உப்பசம் குறைந்து சௌகரியம் ஏற்பட்டது. இரண்டு

"அடிக்கடி வெப்பக்காற்றுக் குளிப்புச் செய்வது தோலில் இரத்த ஓட்டத்தை விரைவாக்குகிறது.

டாக்டர். **J. H.** கேல்லாக் **M. D**

---

நாளில் குணம் அதிகமாக ஏற்பட்டுப் பேசவும் நடக்கவும் முடிந்தது. 2 வாரத்திற்குப் பின் மாஸேஜ், வெப்பக் காற்றுக் குளிப்புச் செய்ததன் பேரில் நிரம்ப குணம் ஏற்பட்டது. மற்றும் இரண்டு வாரத்தில் யாதொரு தொந்தரவும் இல்லாமல் திருப்தி யடைந்தேன். இந்த மாதிரி, மற்ற வியாதிகளுக்கு இந்தக் குற்றமில்லாத முறையைச் செய்தால் நிரம்பப் பயன் அடையலாம்.

திருவனந்தபுரம் }
ஜூலை 1920 }

ஜேக்கப்.

நான் சில வருஷங்களாக அஜீரணத்தாலும், தூக்கம் இன்மையாலும் சங்கடப் பட்டுக் கொண்டிருந்தேன். இங்கிலீஷ் மருந்துகள் பிரயோசனப் படவில்லை. மருந்து சாப்பிடா விட்டால் அசௌகரியமாய் இருந்து வந்தது.

ஒருவர் சிபார்சு செய்ததன் பேரில், என் குடும்ப டாக்டர் கோமானிடம் கலந்து பேசினேன். அவர் நீர்மருத்துவம் நல்லதென்று சொன்னார். நான் மாஸேஜ், வெப்பக் காற்றுக் குளிப்பு, எனிமா முதலிய முறைகளைச் செய்து கொண்டேன். அவற்றால், நல்ல ஜீரணம் ஆகிறது. பலமும், சதை கடினமும், சுறுசுறுப்பும், மூளைத் தெளிவும், அழகும் உண்டாயிருக்கின்றன.

இப்போது மருந்தை விட்டு விட்டு, என் குடும்பத்தில் நீர் வைத்தியமே செய்கிறேன்.

P. திருவேங்கட முதலியார்
துபாஷ்
வால்காட் ஆபீஸ்

சென்னை }
29—6—24 }

"மருந்தின் ஒவ்வொரு அளவும் நோயாளிக்குக் கொடுத்துக் கண்மூடித் தனமாய் அவன் உயிரைக் குறைத்துப் பரீக்ஷை செய்வதே ஆகும்"

டாக்டர். பாஸ்டக்
மருந்து சரித்திர மெழுதிய நூலாசிரியர்

---

நான் ஆறுவாரமாக மாஸேஜ் செய்த பின் அதிக பலமும் களைப்பின்மையும் பெற்றிருக்கிறேன். பலஹீனமுள்ளவர்கள் சிரத்தை எடுத்துக் கொள்ளும் டாக்டர் வானமாமலைப் பிள்ளை அவர்களிடம் வைத்தியம் செய்து கொள்ளும்படி சிபார்சு செய்கிறேன்.

ஏ. ஜே. அப்பாசாமி
கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி
சென்னை.

1917 வருஷம் எனக்கு மேகமும் வெட்டைச்சூடும் ஆரம்பித்தது. அவற்றுடன் நாள் ஒன்றுக்கு நூறு முறைக்கு மேல் மூத்திரமும் பக்கத்தில் பாத்திரம் ஒன்று வைத்துக் கொண்டு போகும்படியான நிலைமையில் இருந்தேன். அதற்கு, மருந்து டாக்டர்களிடம் வைத்தியம் செய்து கொஞ்சம் குணம் ஏற்பட்டது. 1924 வருஷம் நாள் ஒன்றுக்கு 25 தடவை மூத்திரம் போய்க் கொண்டிருந்ததுடன் மூலப் பவுத்திரமும் அதில் சீழ் வடிதலும் மலச்சிக்கலும் இருந்து கொண்டு இருந்தன. இவைகளுக்கு இங்கிலீஷ் வைத்தியமும் தமிழ் வைத்தியமும் செய்து கொண்டு வந்ததில் பிரயோசனம் இல்லை. 1931 வருஷம் மூலத்துப் பக்கத்தில் ஒரு கட்டி உண்டாகி இதற்கு அம்பாசமுத்திரத்தில் டாக்டர் நவநீத கிருஷ்ணப் பிள்ளை அவர்களிடம் காண்பித்ததில் கட்டியை அறுத்துக் குணம் பண்ணுவதாய் அறுத்தார்கள் அதுமுதல் இதுவரையும் புண் ஆறாமலும் சீழ் வடிந்து கொண்டும் இருப்பதுடன்

"பிணம் அறுப்புப் பரிசோதனை, தினமும் நம்முடைய வியாதியின் அறியாமையை நீக்குகிறது. நம்முடைய மருந்து முறையைப் பற்றி அதிருப்தி படும்படியும் செய்கின்றது. பொய்யான விஷயங்களையும் உண்மையற்ற கொள்கைகளையும் நம்பி எந்தத் தீங்கைச் செய்யாமல் இருந்திருக்கிறோம். வியாதிகளை அதிகப் படுத்தி யிருக்கிறோம். அதுமட்டுமன்றி நோயாளரின் மரணத் தொகையையும் அதிகமாக்கி யிருக்கிறோம்.

டாக்டர். பென்சமின், M. D.

---

நாளுக்கு நாள் பலஹீனமும் அசௌகரியமும் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. இவைகளுக்காகப் பட்டணத்தில் வைத்தியம் செய்ய வந்து லோகோபகாரி ஆபீசில் வசித்துக் கொண்டிருந்த வைத்தியர் ராமா நந்த ரவர்களிடம் வைத்தியம் செய்து கொண்டேன். இதற்கு உள்ளுக்கு மருந்துகளும் பஸ்பங்களும் லேகியமும் கொடுத்து வந்தார். மேலே கண்ட வியாதிகள் குணமாகாமல் போனதோடும் கூட மலச்சிக்கலும் முட்டில் வலியும் வாதமும் ஏற்பட்டு உடலில் கெட்ட சதையும் அதிகப் பட்டு உடல் கனமாயும் தூக்கி நடப்பதற்குக் கஷ்டமாயும் இரத்தங் கெட்டுப் பலஹீனமும் சுறுசுறுப்புக் குறைவும் பிறர் தூண்டுதலன்றி வேலை செய்ய இடலாமல் இருப்பதுடன் இரண்டு மூன்று நாளாய் எனக்கு வெளிக்குப் போகாமலும், வயிற்று வலியுடன் டாக்டர் P R. V. பிள்ளை அவர்களிடம் எனக்கு வைத்தியம் செய்யும்படி கேட்டுக் கொண்டேன். அதுமுதல் வைத்தியம் செய்ய ஆரம்பித்தேன். அன்றையதினமே வயிற்று வலி குணமாகி, அன்றையதினம் உடலை நிறுத்துப் பார்த்ததில் 180 பவுன் இருந்தது. தொடர்ந்து வைத்தியம் செய்து வந்ததில் வாதம் குணமாகிச் சீழ் வடிந்து கொண்டுவந்த பௌத்திரப் குணமாகி ஏறட்டுக் கட்டியில் புண் ஆறி பலச் சிக்கல் குணமாகி அடித்த பாதம்

"நீராவிக் குளிப்பு பிரயோசனம் தருகிறது. தீராத பல வியாதிகளுக்கு அது ஒரு திருப்திகரமான சக்தியுள்ள வைத்திய முறை."

டாக்டர். சர். ஆண்டிரூஸ் கிளார்க்,
**M. D., M R. C. H..**

---

நிறுத்துப் பார்த்ததில் 10 பவுன் குறைந்து 170 பவுன் இருந்ததுடன் நல்லபசியும், நல்ல தூக்கமும், சுறுசுறுப்பும் அறிவுத்தெளிவும், இரத்த சுத்தியும், நடப்பதற்கு உடல் லேசாயும், கனம் குறைவாகவும், மனம் தெளிவாகவும், இருந்துகொண்டு இருக்கிறது. இப்போது 160 பவுன் நிறை இருக்கிறது.

**P. L.** சங்கர நாராயண பிள்ளை
சூபர்வைசர்

## தீராத க்ஷயநோய் தீர்க்கப்பட்டது

நான் கொடிய இருமல் நோயால் வருந்திக் கொண்டிருந்தேன் அத்துடன் சுரமும் வந்துகொண்டிருந்தது. எத்தனையோமருந்துகளை உட்கொண்டேன். எள்ளளவு சாந்தியும் ஏற்படவில்லை. மெல்ல மெல்ல நோயின் கொடுமை மிகுந்து கொண்டே வந்தது. வயிற்றுப் போக்கு முதலியன தோன்றி என்னைத் துன்பப் படுத்தத் துடங்கின. இந்த நிலையில் மருத்துவர்களை மறுபடியும் நாடினேன்.

ஆங்கில முறையே மீண்டும் மேற்கொண்டேன். நோய் மிகுந்து கொண்டே வந்ததே அல்லாமல் குணப்படவில்லை. இரவில் தூக்கம் கிடையாது. பெருத்த பலஹீனம் ஏற்பட்டது. எரிச்சலும் மன நிம்மதியின்மையும் உண்டாயின. இவைகள் மிகவும் ஆபத்தான காச நோயின் அறிகுறிகளென்று அறிந்து கொண்டேன். மலைச்சாரலையும் கடற்கரையும் நாடிச் செல்வது நன்மை பயக்குமென கூறினர். நானும் இணங்கி அவ்வாறே

"மந்தமாய் வேலையைச் சரியாய்ச் செய்யாமல் இருக்கிற கருவிகளை முக்கியமாய் மந்த பித்தாசயம், அஜீரணம் மஞ்ச காமாலை பக்கவாதம் முதலிய நோய்கள் வருங்காலங்களில் உற்சாகப் படுத்திக் குணம் கொடுக்கிற மேலான முறைகளில் 'வியர்வை முறை' ஒன்றெனத் திட்டமாய்க் கருதுகிறேன். முதலில் இந்த முறையில் இருந்த அவநம்பிக்கை கொஞ்ச காலத்தில் என்னை விட்டு நீங்கியது.

டாக்டர். ஜேம்ஸ் மேன்பி கல்லி.

---

செய்தேன். இவை ஒன்றுமே பலிக்கவில்லை. நான் இந்த நிலையில் எனது உயிர் போவதா வருவதா என்று ஊசலாடி கொண்டு இருந்தது. நற்காலமாக இந்த வேளையில் நான் டாக்டர் பி. ஆர். வானமாமலைப்பிள்ளை அவர்களை காணும் பாக்கியம் பெற்றேன். அவர்கள் எனக்கு நீர்மருத்துவத்தை மேற்கொள்வது நலம் என்று கூறினார்கள் நானும் ஆசையோடு இசைந்தேன். மூன்றே நாள் சிகிச்சையில் எனக்கு பசியும் ருசியும் அதிகப்பட்டன. நோயின் துன்பமும் தக்க அளவுக்கு குறைந்து விட்டது. இரண்டு மாதம் சிகிச்சை செய்துகொண்டதன்மேல் நான் முழு நலனையும் அடைந்தேன். நோயின் குறிகள் அறவே பறந்து போயின. எனக்கு அதற்குப் பின் வந்த நிம்மதியான தூக்கமும் போசாக்கிரியத்தை விளைத்தது. அதனால் மற்ற மருத்துவ முறைகளால் குணப்படுத்த முடியாத பயம் போன்ற ஆபத்தான நோய்களுக்கு நான் டாக்டர் பிள்ளையவர்களின் உறுதியான முறையை மனமாறச் சிபார்சு செய்கிறேன்.

ஜோசப்
கொட்டாரக்கரை
20—6—20

"நோயாளர் அறையில், ஆண்டாண்டு தோறும் நோயாளர் நொந்து மாள்கின்றனர். மருந்து வைத்திய முறையை மேற்கொண்டு வந்ததில், தற்போது மரணம் அதிகமாய் ஏற்பட்டு வருவதாகத் தெரிகிறது. இந்த மருந்து வைத்திய முறை தாழ்ந்த ஒரு வியாபாரத்திலும் இழிவானது. ஆதலால், அரசாங்கங்கள் மருந்து வைத்தியர்கள் எல்லாரையும் உடனே நீக்கி வைத்து அவர்களுடைய தப்பான முறையை அகற்ற வேண்டும், அல்லது மக்களின் உயிரைக் காப்பாற்றும்படிக்கு வேறு ஒரு நல்ல முறையைத் தேடவேண்டும்.

டாக்டர். பிரேங்க்
பிரபலமான ஐரோப்பிய
நூலாசிரியருள் ஒருவர்.

---

மாஸேஜ் அல்லது உடல் தேய்ப்பைப் பற்றிக் கிறிஸ்துவுக்கு முன் மருந்து முறைக்கே தந்தை என்று சொல்லப்படும் ஹிபாக்ரேட்ஸ் சொல்வதாவது:—

"விறைத்து மடக்க முடியாத பூட்டுகளை உடல் தேய்ப்புச் சீர்திருத்தக் கூடும். உடம்பை இறுக்கவும் கூடும்; தளர்த்தவும் கூடும். சதையை வளர்க்கவும் குறைக்கவும் செய்யும். கடினமாகத் தேய்த்தால் தேகம் இறுகுகிறது. மெதுவாகத் தேய்த்தால் உடம்பு நெகிழ்கிறது. நடுத்தரமாகவும் நிதானமகவும் தேய்ப்பது உடம்பை வளர்க்கும்."

லார்ட் பேக்கன்எழுதின "நீடூழி வாழ்வதன் மர்மம்" என்னும் கட்டுரையில் உடல் தேய்ப்பைப் புகழ்ந்து பேசுகிறார்.

ஸெல்ஸஸ், கேலன் என்பவர்கள் பலவிதமான நோய்களுக்கு 'மாஸேஜ்' முறையைச் சிபார்சு செய்கிறார்கள்.

'பிளாட்டோ' என்பவர் உடல் தேய்ப்பைப் பற்றி உயர்வாகச் சொல்லி இருக்கிறார்.

"சமீபமாக மருந்து வைத்தியர் மிக அதிகமாய் இருக்கிறார்கள் ஆனால், என் ஆயுளில் வியாதிகளும் அதற்குத் தக்கவாறு அதிக மாய் இருக்கின்றன."

ஆபர் நிதி.

---

கிரேக்க நாட்டுத் தத்துவ ஞானியான சாக்ரடீஸ் என்பவர் மாலேஜின் பெருமையை எடுத்துக் கூறியிருக்கிறார்.

ஸெனோபன் எழுதி இருப்பதி லிருந்து, போர் வீரர் நாள் தோறும் எண்ணெய் கொட்டு உடம்பைத் தேய்ப்பது வழக்கம் என்று தெரிய வருகிறது.

"புகழ் பெற்ற அலெக்சாண்டர் சக்ரவர்த்தி உடம்பைத் தேய்த்துக் குளிப்பதற்கென்று ஒரு வேலையாளை வைத்திருந்தார்" என்று சரித்திரத்தால் அறிகிறோம்.

சமீப காலத்திலும் டாக்டர் வெயிர் மிச்சல் என்பவர் உடல் தேய்ப்பு முறையைக் கையாடி அதனால் ஏற்பட்ட அளவற்ற நற்பயன்களை உலகத்துக்கு வெளியிட்டிருக்கிறார்.

"மெடிகல் சர்ஜிகல் ஜர்னல்" என்னும் பத்திரிகை சொல்லுவது:—

"இந்த வெப்பக் குளிப்பு மனிதர்களுக்குத் தந்த ஒரு வரப்பிரசாதமாகும். வியாதிகளைக் குணம் பண்ணுவதற்குச் சிறந்த முறை. இரத்த சுத்தி செய்யும் கைதேர்ந்த முறைகளில் இதுவும் ஒன்று. வைத்திய இலாகாவுக்குத் தெரிந்திருக்கிற உயர்ந்த வைத்திய சிகிச்சைகளில், வெப்பக் காற்று, நீராவிக் குளிப்பு முறை ஒன்று எனத் திடமாய் நம்பப் பட்டிருக்கிறது. ஆகவே இந்த முறையைத் தேசத்தில் ஒவ்வொரு நகரிலும் ஒவ்வொரு கிராமத்திலும், ஆஸ்பத்திரியிலும், வீட்டிலும் கையாளப்பட வேண்டும் என்னும் நம்பிக்கை கொள்ளப் படுகிறது."

"நன்ருகவும் கவனத்தோடும் முறையாகவும் திருப்திகரமாய்ச் செய்து பரீக்ஷித்த போதெல்லாம் மிகுந்த நற்பயன் ஏற்பட்டதாகத் தெரிய வருகிறது. சில சந்தர்ப்பங்களில் இதன் குணம் அதிக ஆச்சரியமாகவும், மந்திரசக்தி போன்றும் இருக்கிறது. இரத்தம் அசுத்தப்பட்டு, அதனுல் உடல் நலம் கெட்டு, உடம்பில் போதிய வலிமை இல்லாது செய்து விடுகிற பலவிதமான ஜுரம், காசம், (ஆஸ்த்மா) வாதம், பக்க வாதம், ஜீரணக் கருவிகளை யொட்டிய நீண்டகால நோய்கள், நரம்பு வியாதிகள், நாட்பட்ட தோல் நோய்கள் போன்ற வியாதிகளில் சிறப்பாக இது பயன் அளிக்கின்றது.

ராவ் பகதூர். டாக்டர். W. E. தனக்கோடி ராஜு

M. D. C. M. F. M. U.

இந்தியாவில் முதன் முதல் நீர் வைத்தியத்தை ஏற்படுத்தியவர்.

---

"பூமியிலுள்ள மருந்துகள் எல்லாம் கடலில் எறிந்துவிடப்படுமாலுல் மக்கள் அனைத்திற்கும் ஒரு பெரிய நன்மையாய் இருக்கும். ஆனுல் மீன்களுக்கோ அது ஒரு பெரிய ஆபத்தாய் இருக்கும். ஒரு மருந்தானது எவ்வளவு நன்மையைச் செய்யக் கூடியதாய் இருந்தாலும் அது தீமையையும் தொடர்ந்தே செய்யும். ஆதலால் ஒவ்வொரு விஷயத்திலும் நாம் உபயோகிக்கும் மருந்துகள், தாங்கள் விளைவிக்கும் தீமைகளை மேற்கொள்ளத் தக்கதான நன்மைகளை அவைகள் செய்யக் கூடுமா என்பதை நிதானித்தறிய வேண்டும்" என்று, கீர்த்தி பெற்ற வைத்திய சாஸ்திரியும், அமெரிக்க ஐக்கிய மாகாணத்திலுள்ள ஆர்வார்ட் மெடிகல் பாடசாலையில் முப்பது வருடமாக உடல் கூறு சாஸ்திரமும் (Anatomy), ஐந்து தேக தர்ம சாஸ்திரமும் (Physiology) கற்றுக் கொடுத்த வித்தியா

"வெப்பக் காற்றுக் குளிப்பு மிக்க மேலான சிகிச்சைகளில் ஒன்று என்று மனிதர்களுக்கு எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக தெரிகிறதோ, அப்பொழுது தோல் சம்பந்தமான நோய்களை ஒழித்துச் சுகமடைவார்கள்."

டாக்டர். கார்பன்டர். **M. D. F. R. S.**
பிரிட்டன் அரச கல்விக்கழகப் பிரபசர்.

---

பண்டிதருமாகிய டாக்டர் ஆலிவர் வென்டல் ஓம்ஸ் என்பவர் ஒரு காலத்தில் சொன்னார்.

சிறு குழந்தைகளாய் இருக்கும் போது நாம் அவர்களுக்குப் புகட்டும் பிரசித்தி பெற்ற மருந்துகளின் மூலமாய் அவர்கள் தேகத்தில் மதுபானம் என்னும் விதையை விதைத்து விடுகிறோம். இது விஷயமாக, அமெரிக்க ஐக்கிய மாகாணத்தின் சிகரேட் விலக்குச் சங்கத்தின் அக்ராசனாதிபதியும் "இன்ஸ் டேல் சேனிடோரியம்" என்பதின் விசாரணை தலைவருமாகிய டாக்டர் டேவிட் பால்சன், **M. D**, என்பவர் பின் வருமாறு உரைக்கிறார். "பிணிதீர்ப்பதில் இணையற்ற மருந்துகளென்று நாடெங்கும் விளம்பரம் பண்ணப் பட்டிருக்கும் மருந்து, நிச்சயமாகவே, ஏரோது அக்காலத்தில் கொலை செய்ததைக் காட்டிலும் அதிகமாகப் பிள்ளைகளைக் கொன்றிருக்கும் என்பதற்கு ஐயமில்லை. ஏனெனில் அந்த மருந்தில் இரண்டு அவுன்சுக்கு அரைகிரெயின் அளவு "மார்பைன்" என்ற விஷம் கண்டிப்பாய்க் கலந்திருக்கும்," என்பதே.

"ஔஷத உபயோகத்தினாலேயே பூமியில் பைத்தியக்காரர் அதிகரிக்கிறார்களென்று சந்தேகமறச் சொல்லலாம். இவ் வியாதியஸ்தர்களும், காக்கைவலி என்று சொல்லப் படும் இழுப்பினால் அவஸ்தை படுகிறவர்களும், மற்றய வியாதிஸ்தர்களும் ஐம்பது வருஷத்திற்குள்ளாக நூற்றுக்கு தொண்ணூறு வீதம் பெருகி யிருக்கிறார்கள்."—

"நிரம்ப தீவிரமான வாத நோய்க்கும் இன்னும் பல வியாதிகளுக்கும் என் குடும்பத்தில் இக்குளிப்பை உபயோகித்திருக்கிறேன். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அதன் வேலை மாந்திரீகத்திற்கு ஒப்பாய் இருந்தது."

டாக்டர். A. B. கிரஹம்.

---

ஜான் ஹார்வே கெல்லாக், எம். டி., எலெல். டி., (அமெரிக்க ஐக்கிய மாகாணம்.) "தேக ஆரோக்கியம்" பத்திராதிபர்.

தற்கால வைத்தியர்கள் மருந்துகளை உபயோகிப்பதைப் பற்றி மிகவும் குறைந்த அபிப்பிராய முள்ளவர்களாய் இருக்கிறார்கள். "அநேக மருந்துகளின் உபயோகமற்ற தன்மையை அறிந்தவர்கள்தான் மேலான வைத்தியர்கள்" என்று வைத்திய சாஸ்திர மாணவர்களால் வாசக புத்தகமாய் உபயோகப்படும். புகழ் பெற்ற நூலாகிய "மருந்துகளை உபயோகிக்கும் விதம்" என்னும் பிரபந்தத்தை இயற்றிய ஸர், வில்லியம் ஆஸ்லர் என்பவர் சொல்லுகிறார்.

"ஜனங்கள் வியாதியாய் இருக்கும் போது மருந்து சாப்பிடுதலாகிய நூதன வழக்கத்தை அவர்கள் விட்டு விடும் காலம் எப்போது வருமென்று நான் ஆவலாய்க் காத்துக் கொண்டிருக்கிறேன்" என்று காலஞ் சென்ற நமது சக்கிரவர்த்தி எட்வர்ட் அரசரின் வைத்தியராகிய ஸர்பிரடெரிக் ரீவ்ஸ் என்பவர் சொல்லுகிறார்.

இங்கிலாந்து, அமெரிக்க, ஆஸ்திரேலியா முதலிய இடங்களில் உழைத்து அனுபவ மடைந்த அமெரிக்க வைத்தியராகிய, டாக்டர். தானியேல் எச். க்ரஸ், M. D., என்பவர், "கீர்த்தி வாய்ந்த மருந்துகளின் மூலமாய் நாம் அபினியை உட்கொள்ளும் வழக்கத்தை உண்டாக்கும்" என்கிறார்.

"புகழ் பெற்ற ஸீஸருக்கு இருந்த நரம்பு நோய், அவருக்கு அவருடைய வேலைக்காரன் ஒவ்வொரு நாளும் தேய்த்து விட்டதால் நீங்கி விட்டது."

புளுட்டஸ்

---

"மருந்து வியாதிகளை குணமாக்குவதில்லையென்று ஜனங்களுக்குக் கற்பிக்க வேண்டியது அவசியம். சில சமயங்களில் அவைகள் உடனே நோயை நிறுத்துகிறதும் உண்மைதான். பிணியாளியும் நோய் நீங்கிச் சுகமாய்க் காணப்படுகிறதாகத் தோன்றுகிறது, அதற்குக் காரணம் என்னவென்றால், நமது தேகத்திலிருக்கும் விஷத்தை வெளியில் நீக்கவும் வியாதிக்கு ஏதுவாய் இருக்கிற தேக நிலையை மாற்றவும் இயற்கைக்கு மிகுந்த வல்லமையுண்டு மருந்து சாப்பிடாமலே சில வேளைகளில் வியாதி நீங்கிச் சுகமடைகிறோம். மருந்து சாப்பிடுவதால் அநேக தடவைகளில் வியாதியின் தன்மை மாறுகிறதேயொழிய வேறொரு பலனும் வருகிறதில்லை. வியாதியின் கூர் மழுங்கி, விஷத்தின் சக்தி மருந்தினால் நீங்கிப் போனதாய்க் காணப் பட்டாலும், அவ்விஷத்தின் தன்மைகள் தேகத்தில் இருந்து, பின்னொரு காலத்தில் மிகுந்த கெடுதியை உண்டாக்கும். விஷங் கலந்த மருந்துகளைச் சாப்பிடுவதால் அநேகர் தங்கள் ஜீவகால மட்டும் நீடிக்கக்கூடிய கொடிய வியாதிகளை வருவித்துக் கொள்ளுகிறார்கள்" என்று ஒரு நன்கு மதிப்புப் பெற்ற அதிகாரி சொல்லுகிறார்.

பின்னும் அவர் சொல்லுவது "சுத்த ஆகாயம், சூரிய வெளிச்சம், அடக்க முடைமை, இளைப்பாறுதல், தேகாப்பியாசம், சுத்த போஜனம், சுத்த ஜலம், தெய்வீக வல்லமையில் நம்பிக்கை வைத்தல் ஆகிய இவைகளே உண்மையான மருந்துகள்."

10000 முறைகள் 10000 தடவை பரிசோதிக்கப்பட்டு விட்டன. எனினும் இந்த நீரிழிவு நோய்க்கு ஒரு மாற்றமும் கண்டு பிடிக்கப்படவில்லை.

பிரபசர் அவான்சோ கிளார்க் எம். டி.

---

*"தங்களுக்கு முன்னுள்ள நூலாசிரியர்கள் எழுதி வைத்துள்ளவற்றையே பார்த்துத் திரும்பவும் எழுதி விட்டார்களே அல்லாமல் மருந்து நூலாசிரியர்கள் புதிதாக ஒன்றையும் கண்டு பிடித்து விடவில்லை."*

பிரபசர். B. F. பார்க்கர் M. D.

---

*"எண்ணெயையும் தண்ணீரையும் கொண்டு உடம்பைத் தேய்ப்பதில் களைப்பு நீங்கி விடுகிறது."*

ஹரிஸ்டாட்டிட்டில்.